

பெரியவர் கொஞ்சம் யோசித்தார். அப்புறம் அடுத்தவனை அழைத்தார்:

"நீ என்ன செய்தாய்?"

"நானும் முதியவர் ஒருவர் சாலையைக் கடக்க உதவினேன்!"

பெரியவருக்குச் சந்தேகம்.

"எப்படி இது... உங்க மூன்று பேருக்கும் மூன்று பெரியவர்கள் கிடைத்தார்களா?"

"அப்படியெல்லாம் இல்லை.. ஒரே பெரியவர்தான்!"

"என்னது... அந்த ஒருத்தர் சாலையைக் கடக்க நீங்க மூணு பேர் தேவைப்பட்டதா?"

"மூணு பேர் இருந்தும் அது சிரமமாத்தான் இருந்தது!"

"என்ன சொல்றீங்க?"

"அந்தப் பெரியவர் சாலையைக் கடக்க விரும்பலே... இருந்தாலும் வலுக்கட்டாயமா நாங்க அவரைத் தூக்கிக் கொண்டு போய் அடுத்த பக்கத்திலே விட்டோம்!"

நண்பர்களே! 'ஆண்டவனை உச்சரிக்கிற உதடுகளை விட அடுத்தவனுக்கு உதவுகிற கரங்கள் மேலானவை!' என்று பெரியவர்கள் சொல்கிறார்கள்.

உண்மைதான்! ஆனாலும் ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள். திட்டம் போட்டுச் செய்கிற உதவி - அரசியல்.

திட்டம் போடாமல் செய்கிற உதவி - ஆன்மிகம்!




# சொர்க்கத்துக்கு அனுமதிச் சீட்டு!

ஒரு பெரிய மனிதன். இந்த உலகத்தில் மிகவும் வசதியாக வாழ்ந்தான்.

ஒரு நாள் அவன் உலக வாழ்க்கையை முடித்துக்கொண்டு சொர்க்கத்துக்குப் போனான்.

அங்கே போன பிறகுதான் தெரிந்தது… சொர்க்கத்தின் வாசல்கதவு மூடி இருந்தது.

மூடிய கதவின் முன்னால் போய் நின்றான்.

''இங்கே யாருமே இல்லையா?'' என்று உரக்கக் கத்தினான். பதில் இல்லை.

''நான் ஒரு பெரிய மனிதன் வந்திருக்கிறேன். கதவைத் திறந்துவிடு!''

சற்று நேரத்தில் சித்ரகுப்தன் அங்கே வந்தான்.

உடனே இந்தப் பெரிய மனிதன், தனது சட்டைப்பையிலிருந்து பத்து ரூபாய் நோட்டை எடுத்து அவன் கையில் திணித்தான்.

''இந்தா… இதை வெச்சுக்கோ… சீக்கிரம் கதவைத் திற… நான் உள்ளே போகணும்!'' சித்ரகுப்தன் சிரித்தான்.

''இதெல்லாம் உங்கள் பூலோக நடைமுறைகள் - லஞ்சம் கொடுக்கறது, கதவைத் திறக்கச் சொல்றது… அதெல்லாம் இங்கே ஒண்ணும் எடுபடாது!''

''அப்படின்னா நான் எப்படி உள்ளே வர்றது?''

''சொர்க்கத்துலே நுழையறதுக்கான அனுமதிச் சீட்டு கொண்டு வந்திருக்கியா?''

''அனுமதிச் சீட்டா? அது எங்கே கிடைக்கும், சொல். எவ்வளவு செலவானாலும் பரவாயில்லை. வாங்கிக்கலாம்.''

''அதைக் காசு கொடுத்து வாங்க முடியாது!''

''வேறே எப்படி வாங்கறது?''

''அடுத்தவர்களுக்கு ஏதாவது உதவி செஞ்சாத்தான் அது கிடைக்கும்.''

"என்ன சொல்றே நீ?"

"பூலோகத்துலே நீ செய்யுற புண்ணிய காரியங்கள்தான் சொர்க்கத்துலே நுழையறதுக்கான அனுமதிச் சீட்டு!"

"இப்ப நான் உள்ளே வர என்ன வழி?"

"பூலோகத்துலே நீ யாருக்காவது... உதவி செஞ்சிருக்கியா?"

பெரிய மனிதன் ரொம்ப நேரம் யோசித்தான்.

பிறகு சொன்னான்: "ஒருமுறை ஒரு கிழவிக்கு 10 காசு தானம் கொடுத்திருக்கேன்... அப்புறம் இன்னொரு நாள் ஓர் அநாதைப் பையனுக்கு ஐந்து காசு கொடுத்திருக்கேன்."



"கொஞ்சம் பொறு!" என்று சொல்லிவிட்டு சித்ரகுப்தன் உள்ளே போனான்.

கொஞ்ச நேரம் கழித்து வெளியே வந்தான்.

"உள்ளே போய் சொர்க்கத்தின் தலைவர்கிட்டே உனது கதையைச் சொன்னேன். அவர் உடனே உத்தரவு போட்டுட்டார்!"

"என்ன உத்தரவு?"

"அந்தப் பதினஞ்சு காசை உன்கிட்டே திருப்பிக் கொடுத்துடச் சொன்னார்!"

"அப்புறம்?"

"உன்னை நரகத்துக்கே அனுப்பி வெச்சுடச் சொன்னார்!" பெரிய மனிதன்

மயங்கி விழுந்தான்.

ஆன்மிக உலகில் பயணம் செய்கிறவர்கள் புரிந்து கொள்ள வேண்டிய ஒரு முக்கியமான பாடம்:

காசு கொடுத்து சொர்க்கத்தை வாங்க முடியாது; ஆனால், கருணையைக் கொடுத்து அதைச் சுலபமாக வாங்க முடியும்!




# மாளிகையின் விலை ஒரு ரூபாய்!

கடலில் கப்பல் ஒன்று போய்க் கொண்டிருந்தது.

பக்தர் ஒருவர் அதில் பயணம் செய்தார்.

நடுக்கடலில், சூறாவளிக் காற்றில் கப்பல் சிக்கிக்கொண்டது.

'கரையைத் தொடுவோமா?' என்ற கவலை எல்லோரையும் பற்றிக் கொண்டது.

கப்பலைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

கப்பல் திசை மாறிப்போனது.

'ஏதாவது பாறையில் மோதி மூழ்கி விடுமோ?' என்கிற நிலைமை. பக்தர் கண்களை மூடினார். கடவுளை நினைத்து வேண்டினார்.

''கடவுளே... எப்படியாவது என்னைக் காப்பாற்றி விடு! நான் உயிர் பிழைத்து ஊர் போய்ச் சேர்ந்துவிட்டால் எனக்குச் சொந்தமான ஒரு கோடி ரூபாய் மதிப்புள்ள மாளிகையை உனக்குக் காணிக்கையாக்குகிறேன்!''

அவரது வேண்டுதல் பலித்தது.

புயல் ஓய்ந்தது.

கப்பல் பத்திரமாகக் கரைக்கு வந்து சேர்ந்தது.

கரையேறிய பக்தன் யோசித்தான்.

'கப்பலில் என்னோடு ஏராளமானவர்கள் பயணம் செய்தனர். அவர்களும் பத்திரமாகக் கரையேறியிருக்கிறார்கள். நான் கொஞ்சம் அவசரப் பட்டுவிட்டேனோ? ஆண்டவனுக்கு அப்படி ஒரு வாக்குறுதியைக் கொடுத்திருக்க வேண்டியதில்லையோ?'

பக்தரின் சிந்தனை தொடர்ந்தது.

'எப்படி இருந்தாலும் பிரார்த்தனையிலிருந்து பின்வாங்க முடியாது. அதை நிறைவேற்ற வேண்டியது உண்மையான பக்தனின் கடமை. என்ன செய்யலாம்?' யோசித்தான்.



முடிவாக, அவன் ஓர் ஏற்பாடு செய்தான்.

அந்த மாளிகையை ஏலம் விடுவதாக அறிவித்தான்.

ஏலம் கேட்க எல்லோரும் வந்து கூடினார்கள்.

அவன் சொன்னான்: "இந்த மாளிகையின் விலை ஒரு ரூபாய். இதன் தூணில் கட்டப்பட்டிருக்கும் பூனையின் விலை ஒரு கோடி ரூபாய். இரண்டையும் சேர்த்தே நீங்கள் ஏலம் கேட்க வேண்டும்!"

ஏலம் கேட்டார்கள்.

விற்பனை முடிந்தது.

கோயிலுக்குப் போனான்.

"கடவுளே... சொன்னபடி எனது மாளிகையை ஏலம் விட்டேன். அதற்குரிய தொகையை இதோ உனது உண்டியலில் சேர்த்து விட்டேன்!" என்றபடி ஒரு ரூபாயை உண்டியலில் போட்டுவிட்டு அந்த பக்தன் கம்பீரமாக வெளியே வந்தான்.

நண்பர்களே!

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்.

இன்றைய பக்தி, கடவுளையும் வியாபாரப் பொருளாக்கி விடுகிறது!




# குளித்தால் புனிதமா?

ஒரு பெரிய மனிதர். வேலைக்காரனைக் கூப்பிட்டார்.

"புறப்படு!" என்றார்.

"எங்கே?" என்றான்.

"புனிதமான இடங்களுக்கெல்லாம் போய் வரலாம். புண்ணிய நதிகளிலெல்லாம் நீராடி வரலாம்."

"குளிக்கறதுக்கு அவ்வளவு தூரம் போகணுங்களா முதலாளி?"

"அட முட்டாளே! ஒன்றைப் புரிந்துகொள்... புண்ணிய தீர்த்தங்களில் நீராடினால், நாம் செய்த பாவங்கள் எல்லாம் போகும். நாம் புனிதமடையலாம்!"

"அப்படின்னா... போயிட்டு வரலாங்க!"

"வெளியூர் சாப்பாடு எனக்கு சரிப்படாது... அதனாலேதான் வேளாவேளைக்குச் சமைச்சுப்போட உன்னை அழைச்சிக்கிட்டுப் போறேன். ஒரு மாசத்துக்குத் தேவையானதையெல்லாம் மூட்டை கட்டி எடுத்துக்கோ!"

அவர்கள் இருவரும் புறப்பட்டார்கள். புனிதத் தலங்களுக்கெல்லாம் போனார்கள். புண்ணிய நதிகளில் எல்லாம் நீராடினார்கள். ஒரு மாதம் கழித்து ஊருக்குத் திரும்பினார்கள். வீட்டுக்கு வந்தவுடன் அந்த வேலைக்காரன் தன் முதலாளிக்கு வேண்டியதை அவசர அவசரமாகச் சமைத்தான்.

"சாப்பிட வாங்க முதலாளி!" என்றான்.

பசியோடிருந்த முதலாளி வேகமாக வந்து உட்கார்ந்தார்.

வேலைக்காரன் பரிமாறினான்.

முதலாளியின் முகம் மாறியது.

முகம் சுளித்தார்.



மோசமான வாசனை. எங்கே இருந்து வருகிறது? சாப்பாட்டில் இருந்துதான்.

"என்னடா சமையல் பண்ணியிருக்கே... துர்வாசனை. சகிக்க முடியல!" என்று சத்தம் போட்டார்.

அவன் பணிவோடு அவர் முன்னால் வந்து நின்று சொன்னான். "ஐயா... புனிதமான காய்கறிகளைக் கொண்டுதான் இன்னிக்கு சமையல் பண்ணியிருக்கேன்!"

"என்னடா சொல்றே?"

"அது வந்துங்க ஐயா... நாம இங்கே இருந்து புறப்படும்போது நம்ம தோட்டத்துலே விளைஞ்ச உருளைக் கிழங்கையும் கொஞ்சம் எடுத்துக்கிட்டு வந்தேன். நாம நீராடின போதெல்லாம் நான் இந்த உருளைக் கிழங்குகளையும் புண்ணிய தீர்த்தத்துலே குளிப்பாட்டினேன். அந்த உருளைக் கிழங்கைத்தான் இப்ப உங்களுக்கு சமைச்சுப் போட்டேன்!"

"என்னடா இப்படி பண்ணிப்புட்டே?"

"புண்ணிய நதிகளிலே குளிச்சா, புனிதமாகலாம்னு சொன்னீங்களே முதலாளி?!"

முதலாளி யோசிக்க ஆரம்பித்தார்.

புழக்கடையில் உள்ள கிணற்றில் குளிப்பதற்கும், புண்ணிய நதிகளில் குளிப்பதற்கும் வித்தியாசம் உண்டு!

ஆன்மிகம் சொல்லுகிறது.

வெளியே சுத்தமாக இருந்தால் மட்டும் போதாது!

உள்ளேயும் சுத்தமாக இருக்க வேண்டும்!




# எதையும் சாப்பிடும் சாமியார்!

ஓர் ஊரில் ஒரு சாமியார் இருந்தார். ஆனாலும் அவர் ஒரே ஊரில் இருப்பதில்லை. ஒரு நாளைக்கு ஓர் ஊர் என்று போய்க்கொண்டே இருப்பார். யாரிடமும் எதுவும் பேசமாட்டார். எப்பவும் மௌனவிரதம்.

அவரிடம் இன்னொரு விரதமும் உண்டு.

யாராவது விரும்பி அழைத்துச் சாப்பிடச் சொன்னால்... எதைப் போட்டாலும் சாப்பிட்டு விடுவார். பிடிக்கிறதோ பிடிக்கவில்லையோ... சிரமப்பட்டாவது சாப்பிட்டு விடுவார். அப்படி ஒரு பழக்கம்!

இப்படிப்பட்டவரை ஒரு கணவனும் மனைவியும் தங்கள் வீட்டுக்குச் சாப்பிடக் கூப்பிட்டார்கள். மறுக்காமல் போனார் சாமியார். இலை போட்டார்கள். சாப்பாடு பரிமாறினார்கள்.

சாப்பிட ஆரம்பித்தார் சாமியார். கணவனும் மனைவியும் கவனித்துப் பார்த்தார்கள். இவர் எதை விரும்பிச் சாப்பிடுகிறாரோ, அதை அதிகமாகக் கொண்டு வந்து வைக்க வேண்டும் என்பது அவர்களின் ஆசை.

அன்றைக்கென்று பார்த்துச் சமையலில் எதிர்பாராத விதமாக ஒரு கொட்டாங்கச்சித் துண்டு கலந்து விட்டது.

சாமியார் எதையும் மிச்சம் வைக்காமல் சாப்பிடுகிறவர் அல்லவா? ஆகவே, அந்தக் கொட்டாங்கச்சித் துண்டை எடுத்து வாயில் போட்டார். எப்படியோ சிரமப்பட்டுக் கடித்து மென்று விழுங்கி விட்டார்.

கணவர் இதைக் கவனித்தார். உடனே மனைவியின் காதைக் கடித்தார். "அடியேய்... இந்த சாமியாருக்குக் கொட்டாங்கச்சின்னா ரொம்பப் பிரியம் போலிருக்கு!"

அவ்வளவுதான்! உடனே அந்தப் பெண்மணி விறுவிறுவென கொல்லைப் பக்கம் ஓடினாள். அங்கே கிடந்த தேங்காய் ஓடுகளையெல்லாம் பொறுக்கி வந்தாள். அம்மியில் வைத்து நொறுக்கினாள். அப்படியே அள்ளிக் கொண்டு வந்து சாமியாரின் இலையில் பயபக்தியோடு வைத்தாள்.



சாமியார் விழிக்க ஆரம்பித்தார். என்ன செய்வது? எதுவும் பேசாமல் அவற்றை அள்ளி வாயில் போட்டுக் கடிக்க ஆரம்பித்தார்.கணவன் குதூகலிக்க ஆரம்பித்தான்.

"சாமி! இது உங்களுக்குப் பிடிக்கும்னு ஏற்கெனவே எங்களுக்குத் தெரியாமப் போச்சு! மன்னிக்கவும். கொஞ்சம் இருங்க... இன்னும் கொண்டு வர்றேன்!" என்றவன் ஒரு பெரிய கூடையை எடுத்துக் கொண்டு அடுத்த வீட்டுக் கொல்லைப் புறத்துக்கு ஓடினான். ஒரு மூட்டையுடன் திரும்பினான்.

சாமியாருக்கு விழி பிதுங்க ஆரம்பித்தது.

கண்கள் சிவந்து நீர் வழிந்தது!

கணவன் மனைவியிடம் சொன்னான்: "சாமி முகத்தை கவனிச்சியாடீ... ஆனந்தக் கண்ணீர்!"

சாமியார் மெல்ல எழுந்தார்.

ஒரே ஓட்டம். கொல்லைப்புறமுள்ள முள் வேலியைத் தாண்டிக் குதித்துப் பறந்து போனார்!

"சாமிக்கு நம்ம பேர்லே ஏதோ கோபம்... வாங்க, போய்க் கூப்பிட்டுக்கிட்டு வரலாம்!" - கணவனும் மனைவியும் சாமியாரைத் துரத்திக் கொண்டு ஓடினார்கள்.

நண்பர்களே! இன்றைக்கு ஆன்மிகம் இப்படித்தான் நம்மையும் துரத்திக் கொண்டிருக்கிறது.

ஒரு வேடிக்கை என்ன தெரியுமா? கடவுளை நம்புகிறவர்களைவிட, கடவுளை எனக்குத் தெரியும் என்று சொல்கிறவர்களை நம்புகிறவர்கள் இன்றைக்கு

அதிகமாகிப் போனார்கள்!




# எலுமிச்சம்பழமும் பலாப்பழமும்!

ஆலயம் ஒன்றின் வாசலில் அந்தப் பெரியவர் உட்கார்ந்திருந்தார். அருகில் ஓர் இளைஞன் நின்று கொண்டிருந்தான்.

பக்தர்கள் விதவிதமான பொருள்களைச் சுமந்தபடிஉள்ளே சென்றுகொண்டிருந்தனர்.

இளைஞன், பெரியவரிடம் கேட்டான்: "ஐயா… இவர்கள் எல்லாம் என்ன கொண்டு செல்கிறார்கள்?"

"பழங்கள்… பலகாரங்கள்!"

"எதற்காக?"

"ஆண்டவன் காலடியில் வைத்துப் படைப்பதற்காக!"

"இவை எல்லாம் ஆண்டவனுக்குப் பிடிக்குமா?"

"இவர்களுக்குப் பிடிக்கும்!"

"அப்படியென்றால்?"

"திரும்ப எடுத்துக்கொண்டு வந்து இவர்களே சாப்பிட்டு விடுவார்கள்!"

"வேடிக்கையாக இருக்கிறது!"

"ஒரு மன்னரின் கதை தெரியுமா உனக்கு?"

"என்ன அது?"

"ஒரு வேடிக்கையான மன்னர். அவருக்குப் பிறந்த நாள் வந்தது. அவருக்கு வாழ்த்துச் சொல்வதற்காக மக்கள் வரிசையாக நின்று கொண்டிருந்தனர். அவர்கள் கையில் விதவிதமான பழங்கள். அந்த மன்னர் சில நேரங்களில் இயல்பாக நடந்து கொள்வார். சில நேரங்களில் விபரீதமாக நடந்து கொள்வார்.

வரிசையில் நின்றவர்களில் முதல் ஆள் உள்ளே சென்றார். அவர் கையில் ஒரு எலுமிச்சம்பழம். அதை மன்னர் கையில் கொடுத்தார். மன்னர் அதை வாங்கி என்ன செய்தார் தெரியுமா?"

"என்ன செய்தார்?"

"அதைக் கொடுத்தவர் வாயைத் திறக்கச் சொன்னார். அவர் திறந்தார். மன்னர் உடனே எலுமிச்சம்பழத்தை அவர் வாயில் திணித்து ஒரு நாள் முழுதும் 'இப்படியே இருக்க வேண்டும்' என்று உத்தரவு போட்டு விட்டார்.

மன்னர் உத்தரவை மீற முடியுமா, என்ன? எலுமிச்சம்பழம் கொண்டு வந்தவர், அதைத் தன் வாயில் கவ்வியபடியே வெளியே சென்றார். அதற்கு முன்பாக மன்னரைப் பார்த்து ஒரு சிரிப்புச் சிரித்தார்.

"ஏன் சிரிக்கிறே?" என்றார் மன்னர் கோபமாக.



"அதுக்கில்லே மன்னா... இந்த எலுமிச்சம்பழத்தை ஒரு நாள் முழுவதும் என் வாயிலே வெச்சிருக்கிறது எனக்கு ஒன்றும் கஷ்டமில்லே. ஆனா... இதே வரிசையிலே பின்னால ஒருத்தன் வந்துகிட்டிருக்கான். அவன் நிலைமையை நினைச்சுப் பார்த்தேன்... சிரிப்பு வந்துட்டது!" என்றான்.

"ஏன்?" என்று கேட்டார் மன்னர்.

"அவன் கையிலே பெரிய பலாப்பழத்தை வெச்சிட்டு நிக்கறான்" என்றான் வந்தவன்! - முடித்தார் பெரியவர்.

இந்தக் கதையைக் கேட்ட இளைஞன் வாய்விட்டுச் சிரித்தான். "இப்படித்தான் இருக்கிறது இந்த பக்தர்களின் செய்கையும்!" என்றார் பெரியவர்.

"அப்படியானால், ஆண்டவன் காலடியில் வைக்கக் கூடிய எதுவும் நம்மிடம் இல்லையா?"

"ஏன் இல்லை... இருக்கிறது. நம் எல்லோரிடமும் அது இருக்கிறது!

அதைத்தான் இறைவனிடம் சமர்ப்பிக்க வேண்டும்!"

"என்ன அது?"

"நம்மிடம் இருக்கிற ஆணவம்!"



# நாயாக மாறிய கழுதை!

காலை நேரம். அந்த மனிதன் நடந்து போய்க் கொண்டிருந்தான். கூடவே, அவனது நாயும் நடந்து போகிறது. அவன் மிகவும் செல்லமாக வளர்க்கும் நாய் அது. அவன் ஒரு கழுதையையும் வளர்த்து வந்தான்.

நாய், நடு வீட்டில் விளையாடிக் கொண்டிருக்கும். கழுதை, கொல்லைப்புறத்தில் நின்று கொண்டிருக்கும். அந்த நாய்க்கு வீட்டுக்குள் ராஜமரியாதை நடக்கும்.

அது குளிப்பதற்கு என்று தனியாக சோப். இரண்டு வேளை பால்; பிஸ்கட். மதியம் சத்துள்ள சாப்பாடு. கொஞ்சம் சோர்ந்து காணப்பட்டால், உடனே தூக்கிக்கொண்டு மருத்துவமனைக்கு ஓடுவார்கள்.

காலையில் முதலாளியுடன் நடைப் பயிற்சி. முதலாளி தனியாக எங்காவது வெளியே சென்று விட்டு, மாலையில் வீடு திரும்பினால்... அந்த நாய் ஆவலோடு ஓடி வரும். அப்படியே எழும்பி முன்னங்கால் இரண்டையும் அவர் தோள் மீது போட்டுக் கொள்ளும். அவரும் சிரித்துக் கொண்டே அதன் முதுகில் செல்லமாகத் தட்டிக் கொடுப்பார்.

சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடி முதலாளி செய்தித்தாள் படிப்பார் அல்லது தொலைக்காட்சி பார்ப்பார். அப்போதெல்லாம் இந்த நாய் அவர் காலடியில் படுத்துக் கிடக்கும். அவரின் கை இதன் தலையை செல்லமாகத் தடவிக் கொண்டிருக்கும்.

அந்த நாய் படுப்பதற்கென்றே ஒரு மெத்தை. சில நேரம் அது அங்கே இருக்கும் மேஜை - நாற்காலி மீது கூட ஏறி விளையாடும். சோபாவில் ஏறி உட்கார்ந்து கொள்ளும். அவ்வளவு செல்வாக்கு. இவ்வளவையும் அந்தக் கழுதை கொல்லைப் புறத்தில் இருந்தே கவனித்தது. அப்புறம் யோசித்தது.

'என்ன இது... இந்த வீட்டுல நாம கழுதையா உழைக்கிறோம். பொதி சுமக்கிறோம். நமக்கு ஒரு நல்ல சாப்பாடு கிடையாது... படுக்கை கிடையாது... ஒரு நாளாவது நம்ம தலையையோ, முதுகையோ நம்ம முதலாளி தடவிக் கொடுத்தது கிடையாது. ஆனா, இந்த நாய் இந்த வீட்டுக்காக ஒரு நாள் கூட ஒரு

துரும்பைக்கூட அசைச்சது இல்லை. அதைப் போய் இந்த வீட்டுல உள்ளவங்க இப்படி தலையிலே வெச்சுத் தாங்கறாங்களே?' இப்படி யோசித்த கழுதை, இறுதியாக ஒரு முடிவுக்கு வந்தது. 'சரி... இனிமே நாமும் அந்த நாய் மாதிரியே நடந்துக்குவோம். அதுக்குப் பிறகாவது நமக்கும் அந்த மரியாதை கிடைக்குதா பார்க்கலாம்!'



முதலாளி எங்கோ வெளியே சுற்றிவிட்டுக் களைப்போடு வீடு திரும்பினார். இந்தக் கழுதை அவரிடம் ஓடியது. முன்னங்கால்களை அவர் தோள் மீது தூக்கிப்போட்டது. நடுங்கிப் போனார் முதலாளி. விலகி ஓடினார். கழுதை அவர் பின்னாலேயே ஓடி, நாய் மாதிரி தன் வாலை ஆட்டிக் கொண்டே அவரைச் சுற்றிச் சுற்றி வந்தது. உள்ளே ஓடினார். கழுதை விடவில்லை. உள்ளே ஓடி அங்கே இருந்த மேஜை மீது தாவி ஏறி உட்கார்ந்தது. பொருள்கள் எல்லாம் கீழே விழுந்து சிதறின.

முதலாளி பார்த்தார். "இந்தக் கழுதைக்கு என்னமோ ஆயிட்டுது!" என்று முனகிக் கொண்டே ஓடிப் போய் ஒரு பெரிய கயிறு கொண்டு வந்தார். கழுதையின் கால்களையும் கழுத்தையும் சேர்த்துக் கட்டினார். கொல்லைப் புறத்துக்கு இழுத்துப் போய் தள்ளிவிட்டார். சாப்பாடு எதுவும் கொடுக்காமல் பட்டினி போட்டார்.

இப்போது அந்தக் கழுதை யோசித்ததாம்: 'இந்த மனிதனுக்கு என்ன ஆயிற்று?'

இயல்பு மாறினால் இதுதான் நிலைமை. இயற்கையின் படைப்புகள் பாதை மாறிப் போகக்கூடாது. இது ஆன்மிகத்தில் ஒரு முக்கியமான பாடம்.

ஆகவே, இன்றைய மனிதர்கள் முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டியது: தாங்கள் எப்போதும் மனிதர்களாக நடந்து கொள்ள வேண்டும் என்பதுதான்!




# கரடிகள் சொல்லும் உண்மை!

இரண்டு நண்பர்கள் ஒரு காட்டில் நடந்து போய்க் கொண்டிருக்கிறார்கள். எதிரே திடீரென்று ஒரு கரடி நடந்து வந்து கொண்டிருக்கிறது.

"இப்ப என்னடா பண்றது?" என்றான் ஒருத்தன்.

"எப்படியாவது தப்பிக்கணும்!" என்றான் இன்னொருத்தன்.

ஒருவன் பக்கத்தில் இருந்த மரத்தைப் பார்த்தான். கிடுகிடுவென்று அதில் ஏறி உச்சியில் போய் உட்கார்ந்து கொண்டான்.

இன்னொருவன், அருகே தெரிந்த குகை ஒன்றில் ஓடி ஒளிந்து கொண்டான்.

கரடி வந்தது. மரத்தடியில் நின்று கொண்டது.

குகைக்குள் ஓடியவன் இரண்டு நிமிடங்கள் கழித்து வெளியே வந்து எட்டிப் பார்த்தான்.

கரடி கண்ணில் பட்டது. உடனே உள்ளே போய்விட்டான்.

இரண்டு நிமிடங்கள் கழிந்தன. மறுபடி வந்து எட்டிப் பார்த்தான். உடனே உள்ளே போய் விட்டான்.

இப்படியே தொடர்ந்து செய்து கொண்டிருந்தான்.

மர உச்சியில் இருந்தவன் இதைத் தொடர்ந்து கவனித்துவிட்டு, அங்கே இருந்து கத்தினான்: "ஏய்... முட்டாள்... எதுக்காக இப்படி அடிக்கடி வந்து வெளியே தலையை நீட்டுறே? பேசாம உள்ளேயே இருக்க வேண்டியதுதானே?"

இதற்கு அவன் சொன்னான்: "உள்ளேயும் ஒரு கரடி இருக்கிறது!"

நண்பர்களே! இது ஒரு வேடிக்கைக் கதை.

அந்த இரண்டு கரடிகளுமே உண்மையில் கரடிகள் அல்ல.

அவை... அச்சத்தின் அடையாளங்கள்.

அந்த இரண்டு நண்பர்கள் யார் தெரியுமா?

ஒருவர் 'கடவுள் உண்டு' என்று சொல்கிறவர்; இன்னொருவர் 'கடவுள் இல்லை' என்று சொல்கிறவர்.

உண்டு என்பதில் உறுதியாக இருக்கிறவர்களும் பயப்படத் தேவை இல்லை; இல்லை என்பதில் உறுதியாக இருப்பவர்களும் பயப்படத் தேவையில்லை!

ஆனால், இன்றைக்கு பயப்படாத மனிதர்கள் யாருமே இல்லை!

ஒரு ஞானியிடம் கேட்டார்கள். "கடவுள் எப்போதும் நம்முடன் இருக்கிறார் என்பதை ஏன் எல்லோரும் ஏற்க மறுக்கிறார்கள்?" ஞானி சொன்னார்: "எல்லாம் ஒரு பாதுகாப்புக்காகத் தான்!"

"என்ன சொல்கிறீர்கள்... புரியவில்லையே!"



"விவரமாகச் சொல்கிறேன்... கடவுள் தன்னுடனே இருக்கிறார் என்று நம்பினால், அவனால் எந்தக் குற்றமும் செய்ய முடியாது. ஒரு நல்லவன் உங்கள் கூடவே இருக்கிறான் என்பதை உங்களால் சகித்துக் கொள்ள முடியுமா?

இதை ஈடுகட்டுவதற் காகவேதான் உருவ வழிபாடு வந்தது! நம் உள்ளே

இருக்கிற கடவுளைத் தூக்கி வெளியே வைத்துவிட்டு, குற்றங்கள் பல புரிந்து, அதற்கு ஈடாக வேண்டுதல், பாவமன்னிப்பு, கொண்டாடுதல் - இப்படி சௌகரியமாகப் பல காரியங்களைச் செய்து... ஒரு பொய் சக்தியைத் தேடிக் கொள்வது எவ்வளவு எளிது?"




# காலில் விழுந்தது ஏன்?

ஆன்மிகச் சொற்பொழிவுகள் செய்கிற ஒரு பெரியவர் வெளியூர் சென்றார்.

அங்கே ஒரு நண்பரின் வீட்டில் தங்கியிருந்தார். அவருடன் பேசிக்கொண்டிருந்தார்.

"எல்லா மனிதர்களும் அடுத்தவர்களைப் பார்த்து அவர்களைப்போல் ஆகவேண்டும் என்றுதான் ஆசைப்படுகிறார்கள். அவர்களுக்குத் தங்களுடைய தனித்தன்மை தெரிவதில்லை!"

"அப்படியா சொல்கிறீர்கள்?"

"ஆமாம்... எல்லாருமே போலி நடத்தைக்காரர்கள். மற்றவர்களைப் பார்த்து நடிப்பவர்கள்!"

"அப்படியென்றால் யாருக்கும் சொந்தபுத்தி இல்லை என்கிறீர்களா?"

"கொஞ்சம் பொறுங்கள்... உங்கள் சந்தேகத்தைப் போக்குகிறேன். அதற்கு நீங்களும் கொஞ்சம் ஒத்துழைக்க வேண்டும்!"

"என்ன செய்யவேண்டும்... சொல்லுங்கள்!"

"இப்போது - இங்கே என்னைப் பார்ப்பதற்கு உள்ளே யாராவது வருகிறபோது அந்த நேரம் பார்த்து நீங்கள் என் காலைத் தொட்டு வணங்கி, காலடியில் ஒரு நூறு ரூபாய் நோட்டைப் போடுங்கள்!"

"சரி, செய்கிறேன்!"

அவர்கள் காத்திருந்தார்கள்.

கொஞ்ச நேரத்தில் -

மூன்று பேர் உள்ளே வந்தார்கள்.

அவர்கள் நுழைகிற நேரம் பார்த்து இந்த அன்பர் அந்தப் பெரியவரின் காலடியில் நூறு ரூபாய் நோட்டை வைத்துவிட்டு, அவர் காலைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக்கொண்டார். அவ்வளவுதான்!

அடுத்தடுத்து என்ன நடந்தது தெரியுமா?

வந்தவர்களும் வரிசையாக அவர் முன்னே ஆளுக்கு நூறு ரூபாய் வீதம் காலடியில் வைத்து தொட்டு வணங்கினார்கள். பிறகு உட்கார்ந்தார்கள்.

கொஞ்ச நேரம் பேசிக்கொண்டிருந்துவிட்டுப் போனார்கள்.

அவர்கள் போன பிறகு, அந்தப் பெரியவர், நண்பரிடம் சொன்னார்:

"இவர்கள் மூவரும் 40 வருடங்களாக என்னைப் பார்க்க வந்து போய்க் கொண்டிருக்கிறார்கள். இதுவரை ஒரு தடவைகூட ஒரு காசு போட்டதில்லை... இன்றைக்கு நூறு ரூபாய் நோட்டுகளைப் போடுகிறார்கள்! அதனால்தான் சொன்னேன், மனிதர்கள் மற்றவர்களைப் போல் நடிப்பதில் கெட்டிக் காரர்கள் என்று!"



இன்றைக்கு ஆன்மிகம் என்ற பெயரில் நடை பெறுகிற பல சடங்குகள் இப்படி ஆரம்பித்தவை தான்!

ஓர் அரங்கத்தின் உள்ளே இருந்து ஒரு பெரியவர் வந்து கொண்டிருந்தார்.

அவர் பின்னால் தொடர்ந்து வந்த ஒரு மனிதன் விரைந்து அவருக்கு முன்னால் வந்து காலில் விழுந்து வணங்கி பிறகு எழுந்து சென்றான்.

பின்னால் வந்துகொண்டிருந்த இன்னொருவன் இதைப் பார்த்தான். உடனே அவனும் ஓடிவந்து அவர் காலில் விழுந்து வணங்கிவிட்டு எழுந்து சென்றான்.

அப்புறம் முதலில் விழுந்து வணங்கியவனிடம் போய் கேட்டான்: "அவரு யாரு... ரொம்ப பெரியவரா... எதுக்காக அவரு கால்லே ஓடிவந்து விழுந்தே?"

"அந்த ஆளு போட்டிருக்கறது என்னோட செருப்பானு கண்டுபிடிக்கறதுக்காகத்தான்!"




# அழியாது அந்தக் குறை!

ஓர் ஊரில் ஒருவன், மிகுந்த சிரமப்பட்டு பல கலைகளைக் கற்றுக்கொண்டான். அந்தக் கலைகளில் ஒன்று, தன்னைப் போலவே இன்னொருவனை உருவாக்கும் வித்தை! இது மாதிரி எத்தனை பேரை வேண்டுமானாலும் அவனால் உருவாக்க முடியும்.

அவனது ஆற்றலைப் பார்த்தவர்கள் ஆச்சரியப்பட்டுப் போனார்கள். பலபேர் அவனை வழிபடவும் ஆரம்பித்தார்கள்.

இதன் விளைவு - அவன் மனம் கனமாகத் தொடங்கியது. கர்வம் உள்ளே போய் உட்கார்ந்து கொண்டது. "என்னால் முடியாதது எதுவுமில்லை!" என்று எகத்தாளமாகச் சொன்னான்.

"ஆமாம். உண்மைதான்!" என்றார்கள் அவனை வணங்குகிறவர்களும்.

அவனது இறுதிக்காலம் நெருங்கியது. இந்த உலகத்தைவிட்டுப் போகவேண்டிய நேரம். அவனை அழைத்துக்கொண்டு போக காலதேவன் தன் இருப்பிடத்தில் இருந்து புறப்பட்டான்.

"நீங்கள் எதற்கு? நானே போய் அவனை அழைத்துக்கொண்டு வந்துவிடுகிறேன்" என்று புறப்பட்டது மரணதேவதை.

"சரி போய் வா!" என்றான் காலதேவன்.

மரணதேவதை வந்து கொண்டிருக்கிற செய்தி இவனுக்கு வந்து சேர்ந்தது.

'தப்பிக்க என்ன வழி?' என்று யோசித்தான். உடனே ஒரு முடிவுக்கு வந்தான். தன்னை மாதிரியே இன்னும் ஒரு பத்துப் பேரை உண்டு பண்ணிவிட்டான்.

மரணதேவதை இவன் இருப்பிடம் வந்து பார்க்கிறாள். ஒரே மாதிரி உருவத்தில் பதினோரு பேர் நின்று கொண்டிருக்கிறார்கள்.

ஒரே குழப்பம். இதில் யார் உண்மையான நபர் என்று அவளுக்குப் புரியவில்லை. பிறகு, 'இது நம்மால் முடியாத காரியம்' என்பதை உணர்ந்துகொண்டு விண்ணுலகம் திரும்பினாள்.



காலதேவனிடம் போய்த் தன் தோல்வியை ஒப்புக்கொண்டாள். "அந்த மனிதனை என்னால் அடையாளம் கண்டுபிடிக்க முடியவில்லை!"

"உண்மையான மனிதனை அடையாளம் காண ஒரு சுலபமான வழி இருக்கிறதே?"

"என்ன வழி அது?"

காலதேவன் அந்த தேவதையின் காதோடு காதாக அந்த ரகசியத்தைச் சொன்னான். தேவதை யின் முகம் மலர்ந்தது.

"சரி, நானே மறுபடியும் போகிறேன்!" என்று சொல்லிவிட்டு புறப்பட்டாள்.

இங்கே - மறுபடியும் அந்தப் பதினோரு பேரும் வரிசையாக நின்றுகொண்டிருக் கிறார்கள்.

தேவதை சொன்னாள்: "ஏ... மனிதனே! உன்னுடைய திறமை என்னை ஆச்சரியப்பட வைக்கிறது... உன்னால் முடியாதது எதுவும் இல்லை. ஒப்புக்கொள்கிறேன்! உன்னைப் போலவே பத்துப் பேரை உருவாக்கிவிட்டாய்! இருந்தாலும் ஒரே ஒரு குறை மட்டும் தெரிகிறது. அதை வைத்து உன்னை நான் கண்டுபிடித்துவிட்டேன்!"

வரிசையாக நின்ற அந்தப் பதினோரு பேரில் ஒருவன் முன்னால் வந்தான். அவனுக்குக் கோபமே வந்துவிட்டது. "இருக்கவே இருக்காது..! சொல்லுங்கள், என்ன குறை?" என்று கத்தினான்.

"இதுதான் அந்தக் குறை!" என்று சொல்லிக்கொண்டே... தேவதை அவன் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு போனாள்!




# பல்லக்கும் பசுமாடும்!

ஓர் ஊரில் பெரியவர் ஒருவர் இருந்தார். அவர் எங்கே போனாலும் பல்லக்கில்தான் போவார்... வருவார்.

எனவே, பல்லக்குத் தூக்குவதற்கு என்றே நாலு பேரை வேலைக்கு அமர்த்தியிருந்தார். அவர்களுக்கு அதுதான் வேலை.

தினமும் காலையில் வேலைக்கு வந்து, வீட்டு வாசலில் காத்திருப்பார்கள்.

பெரியவர் புறப்பட்டு வந்தால் உடனே இவர்கள் எழுந்து நிற்பார்கள்.

அவர் பல்லக்கில் அமர்ந்ததும் இவர்கள் அதைத் தூக்கித் தோளில் வைத்துக்கொள்வார்கள்.

அவர் காட்டுகிற திசையில் நடக்கவேண்டும். அவர் சொல்கிற இடத்தில் பல்லக்கை இறக்க வேண்டும்.

மாலையில் பத்திரமாக வீட்டில் கொண்டுவந்து சேர்த்துவிட்டு அவர்கள் புறப்பட்டுவிடுவார்கள்.

இதைச் சரியாகச் செய்துகொண்டிருந்தார்கள். அதற்குரிய ஊதியத்தையும் ஒழுங்காகப் பெற்றுக்கொண்டுவந்தார்கள்.

ஒரு நாள் அந்தப் பெரியவர் வீட்டில் கட்டியிருந்த பசுமாடு காணாமல் போய்விட்டது.

கயிற்றை அறுத்துக்கொண்டு எங்கேயோ ஓடியிருக்கிறது!

என்ன செய்வது?

அந்தப் பெரியவரின் மனைவி வெளியே வந்தாள். பல்லக்குத் தூக்கிகள் நாலு பேரும் சும்மாதான் உட்கார்ந்திருந்தார்கள்.

அவர்களுக்கு அன்றைக்கு ஏதும் வேலை இல்லை போலும். எனவே, அவர்களைப் பார்த்து அவள் சொன்னாள்:



"இதோ பாருங்க... நம்ம வீட்டுப் பசுமாடு காணாம போச்சு! நீங்க நாலு பேரும் நாலு பக்கமா போயி தேடிப் பாருங்க... எங்கேயாவது மேஞ்சுக்கிட்டிருக்கும். பார்த்துக் கூட்டிட்டு வாங்க!"

அவர்கள் சொன்னார்கள்:

"அம்மா! மன்னிச்சிக்குங்க! பல்லக்கு தூக்கறது மட்டும்தான் எங்க வேலை! பசுமாட்டைத் தேடறது எங்க வேலை இல்லை!"

அந்த அம்மாள் கணவரிடம் போய் விஷயத்தைச் சொன்னாள்.

அவர் யோசித்தார். பிறகு - "அப்படியா சொன்னார்கள்? நான் பார்த்துக்கொள்கிறேன்!" என்று புறப்பட்டார்.

வெளியே வந்தார். பல்லக்கில் உட்கார்ந்தார்.

அவர்கள் ஓடிவந்து தூக்கினார்கள்.

"இப்ப தெருத்தெருவா போங்க. பசுமாட்டை நான் தேடிக்கிறேன்!"

அவர்கள் பல்லக்கையும் சுமந்துகொண்டு பசுமாட்டையும் தேடுகிற மாதிரி ஆயிற்று!

இன்றைக்கு நம்மில் பலருக்கும் இது மாதிரியான மனோபாவம் இருக்கிறது!

'இது எனக்குச் சம்பந்தமில்லை' என்று சில விஷயங்களில் தப்பிக்க நினைக்கிறோம்.

அப்படி தப்பிப்பதற்காகச் செய்கிற முயற்சியே நம்மை ஒப்புக்கொள்ளவும் செய்துவிடுகிறது!



# சந்தேகத்தால் வந்த சங்கடம்!

அது ஓர் ஆடம்பரமான ஓட்டல். ஓர் ஆணும் பெண்ணும் அங்கு தங்கினார்கள். இரவு முழுவதும் உல்லாசமாகப் பேசிக்கொண்டிருக்க வேண்டும் என்பது அவர்கள் விருப்பம்.

விசாலமான அறை. உள்ளே நுழைந்ததும் அந்த இளைஞன் ஒரு மாதிரியாக நடந்துகொண்டான். எதையோ தீவிரமாக யோசித்தான்.

"என்ன ஆச்சு உங்களுக்கு?"

"ம்... ஒண்ணுமில்லே... எனக்கு ஒரு சந்தேகம்..?"

"என்ன சந்தேகம்?"

"இந்த அறையில் ஒலிவாங்கிகளை மறைத்து வைத்திருப்பார்களோ என்று."

"எதற்காக அப்படி...?"

"நாம் என்ன பேசிக்கொள்கிறோம் என்பதைத் தெளிவாகக் கேட்பதற்காக!"

"அப்படியுமா செய்வார்கள்?"

"அமெரிக்காவில் வாட்டர் கேட் ஊழல் கேள்விப்பட்டதில்லையா? ஒட்டுக்கேட்பது உலக வழக்கம்தான்!"

"அதுசரி... நாம் என்ன இங்கே ஏதாவது சதித்திட்டமா தீட்டப் போகிறோம்?"

"அப்படி இல்லை... இருந்தாலும் மனசு கேட்கமாட்டேன் என்கிறது!"

"சரி... அதற்காக இப்போது என்ன செய்யப் போகிறீர்கள்?"

"சோதித்துவிடலாம்!" என்றவன் மேசை, நாற்காலி, விளக்கு, தரைவிரிப்பு எல்லாவற்றையும் புரட்டிப் பார்த்தான். தரைவிரிப்புக்கு அடியில் - ஒரு பித்தளைத் தகடு பதிக்கப்பட்டிருந்தது. அதன் நான்கு மூலைகளிலும் திருகாணிகள்...!

எதற்காக இது? அவனுக்குச் சந்தேகம்!

தன் பெட்டியைத் திறந்தான். அதில் தயாராக வைக்கப்பட்டிருந்த 'ஸ்குரூ டிரைவரை' எடுத்தான். பித்தளைத் தகட்டின் நான்கு மூலைகளிலும் இருந்த திருகாணிகளை மெல்லக் கழற்றினான். அவற்றைத் தன் பெட்டியில்

பத்திரப்படுத்திக் கொண்டான்.

இப்போதுதான் அவன் மனம் அமைதியடைந்தது. நிம்மதியாக வந்து உட்கார்ந்தான்.

இருவரும் உற்சாகமாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். பிறகு தூங்கினார்கள்.

காலையில் கதவு தட்டப்பட்டது. திறந்தார்கள். ஓட்டல் மேலாளர் நின்று கொண்டிருந்தார்.

"காலை வணக்கம்!"

"வணக்கம்!"



"எப்படி இருந்தது அறை? பிடித்திருக் கிறதா?"

"பிரமாதம்!"

"இரவு நிம்மதியாகத் தூங்கினீர்களா?"

"ம்... தூங்கினோம்!"

"ஒன்றும் இடைஞ்சல் இல்லையே..?"

"இல்லையே! எதற்காக இப்படிக் கேட்கிறீர்கள்?"

"ஹிஹி! ஒன்றுமில்லை. கீழ்மாடியில் ஒரு விபத்து. தேனிலவு அறை அது. அறையின் மேலே இருந்த சரவிளக்குக்கொத்து கீழே படுத்திருந்த இளம் தம்பதி மேல் விழுந்துவிட்டது! இரவு முழுதும் அதற்கடியில் அவர்கள் அகப்பட்டுக் கொண்டார்கள்!"

சந்தேகப்படுகிற மனம் சரியான திசையில் நம்மை அழைத்துச் செல்வது போலத்தான் தோன்றும். திசைமாறிப் போனது பின்னால்தான் தெரியவரும்!

ஒன்றைப் புரிந்துகொள்ளுங்கள். அதிகப்படியான எச்சரிக்கை உணர்வுதான் அதிகப்படியான தடுமாற்றங்களையும் உண்டுபண்ணிவிடுகிறது!



# கடவுளே வந்தாலும் குழப்பம்!

ஆலய மண்டபத்தில் கூட்டம் நிரம்பி வழிகிறது. ஆன்மிகப் பேச்சாளர் ஒருவர், 'கடவுளைக் கண்டேன்' என்கிற தலைப்பில் பேசிக்கொண்டிருக்கிறார். அவரைப் போலவே ஆண்டவனைப் பார்க்க வேண்டும் என்கிற ஆவலில் அடியவர்கள் உட்கார்ந்திருக்கிறார்கள். சொற்பொழிவும் முடிந்தது.

"உங்களுக்கு ஏதும் சந்தேகம் இருந்தால் என்னிடம் கேட்கலாம்!" என்றார்.

ஒருவர் எழுந்து கேட்டார்: "கடவுள் எனக்குக் காட்சி கொடுப்பாரா?"

"நிச்சயம் காட்சி கொடுப்பார்!"

"அதற்கு நான் என்ன செய்ய வேண்டும்?"

"மனமுருகி பிரார்த்தனை செய்ய வேண்டும்!"

"எப்படி அவ்வளவு உறுதியாகச் சொல்கிறீர்கள்?"

"அனுபவத்தைச் சொல்கிறேன். அவ்வளவுதான்!"

கூட்டம் கலைந்தது. சந்தேகம் கேட்டவர் காரில் ஏறி ஊருக்குப் புறப்பட்டார். இரண்டு மணி நேரம் பயணம் செய்து அவர் தன் இருப்பிடத்தை அடைய வேண்டும். ஒரு காட்டின் வழியே கார் சென்றபோது திடீரென்று பழுதாகிவிட்டது. காரின் ஒரு சக்கரம் கழன்று தனியே ஓடிவிட்டது. எரிச்சலோடு அவர் கீழே இறங்கினார். அது நடுக்காடு. பழுதுபார்க்கவும் பக்கத்தில் யாருமில்லை!

"ஆண்டவா! உன்னைத் தேடி ஆலயத்துக்கு வந்தேன். உன் பெருமைகளையெல்லாம் அவர் பேசக் கேட்டேன். எனக்கு இப்படி ஒரு சிக்கலை உண்டுபண்ணுகிறாயே! இது நியாயமா?" என ஆண்டவனைத் திட்ட ஆரம்பித்தார். அப்போது அந்த வழியாக இன்னொரு கார் வந்து நின்றது. அதன் உள்ளேயிருந்து இறங்கியவர், ஆலயத்தில் பேசிய அந்த ஆன்மிகப் பேச்சாளர்! "என்ன பிரச்னை?" என்றார்.

"கார் சக்கரம் ஓடிப்போச்சு!"

"கவலைப்படாதீர்கள்... கடவுள் இருக்கிறார்! பார்த்துக்கொள்வார்!"

"இப்போது எனக்குத் தேவை ஒரு மெக்கானிக்... கடவுள் அல்ல!"

"கடவுளை நம்புங்கள்... சரியாகிவிடும்!"

"சரியாகிவிடுமா? அதெப்படி, சக்கரம் தானாக வந்து ஒட்டிக்கொள்ளுமா?"



"கடவுள் மனம் வைத்தால் ஒட்டிக்கொள்ளும்!"

"எங்கே, கடவுளை மனசு வைக்கச் சொல்லுங்கள்... பார்க்கலாம்!"

பேச்சாளர் யோசிக்க ஆரம்பித்தார். ஆனாலும் கண்களை மூடிப் பிரார்த்தனை செய்தார். பிறகு கண்களைத் திறந்தார். என்ன ஆச்சரியம்?! கழன்றுபோன சக்கரம் தானாக உருண்டு வந்து காருடன் ஒட்டிக்கொண்டது. ஆன்மிகப் பேச்சாளர் இதைப் பார்த்தார். அவ்வளவுதான்! அதிர்ச்சியில் மயக்கம் போட்டு விழுந்தார். இப்படி நடக்கும் என்று அவர் எதிர்பார்க்கவே இல்லை! ஆண்டவனைப் பற்றி பேசத் தெரிந்த அவருக்கு ஆண்டவன் மீது நம்பிக்கை இல்லை!

இன்றைக்கு ஆத்திகர்கள் அப்படித்தான் இருக்கிறார்கள். 'இல்லை' என்பதில் உறுதியாக இருக்கிற நாத்திகர்களைவிட, 'உண்டு' என்பதில் உறுதியாக இருக்கிற ஆத்திகர்கள் குறைவு!

ஒருவன் அலறியடித்துக்கொண்டு ஆலயத்தை விட்டு வெளியே ஓடிவந்தான். எதிரே வந்தவர் கேட்டார்.

"ஏன் இப்படி பயந்து ஓடி வர்றே?"

"சாமி கும்பிட்டேன்... விபூதி கொடுத்தார். பயந்துட்டேன்!"

"அர்ச்சகர் விபூதி கொடுக்கறது வழக்கம்தானே?"

"ஆனா, இன்னிக்கு அந்த ஆண்டவனே நடந்து வந்து விபூதி கொடுக்க ஆரம்பிச்சுட்டாரே!"



# தொந்தரவு இல்லாமல் டிரம்ஸ் வாசிப்பது எப்படி?

ஒரு பேச்சாளர், அவர்பாட்டுக்குப் பேசிக்கொண்டே இருந்தார். கேட்கிறவர்களுக்கு 'போர்' அடித்தது.

கேட்க வந்தவர்களில் இருவர் தங்களுக்குள் மெதுவாகப் பேசிக்கொண்டார்கள்.

''என்ன இது... இந்த ஆள் இப்படி 'போர்' அடிக்கிறான்?''

''அவரைப் பொறுத்தவரைக்கும் அவர் சுவாரஸ்யமாகத்தான் பேசிக்கொண்டிருக்கிறார். அது நமக்கு போரடிக்கிறது... அவ்வளவுதான்!''

''அது சரி... அவர் பேசுவது நமக்கு இடைஞ்சலாக இருக்கிறது என்பது அவருக்குத் தெரியாதா?''

''தெரியாது! அதுதான் பிரச்னையே!''

இப்படிப்பட்ட பிரச்னைகளை நாம் நாள்தோறும் சந்தித்துக் கொண்டுதான் இருக்கிறோம்! சரி, இதற்கு என்னதான் தீர்வு?

''நான் எப்படி வாழ வேண்டும்? எனக்கு உங்களின் சுருக்கமான அறிவுரை என்ன?'' என்று ஒரு பெரியவரைப் பார்த்துக் கேட்டார் ஒருவர். இதற்கு அவர் சொன்ன சுருக்கமான அறிவுரை: ''அடுத்தவர்களுக்கு அசௌகரியமாக இருக்காதே!''

''சரி!''

''ஆனால், ஒரு விஷயம்!''

''என்ன?''

''நீ அசௌகரியமாக இருக்கிறாய் என்பது அடுத்தவர்களுக்குத்தான் தெரியும். உனக்குத் தெரியாது..!''

ஒரு சிறுவன், அப்பாவைத் தொந்தரவு செய்து கொண்டிருந்தான். ''எனக்கு ஒரு டிரம்ஸ் வாங்கிக் கொடு!''



“இப்ப வேணாம்டா... நான் சொல்றதைக் கேளு... அப்புறமா வாங்கித் தர்றேன்!”

“அதெல்லாம் முடியாது. எனக்கு இப்பவே வேணும்!”

அப்பா என்னென்னவோ சொல்லிப் பார்த்தார். சிறுவன் கேட்பதாக இல்லை. விடாமல் அடம் பிடித்தான்.

“நீ வாங்கிக் கொடுக்கலேன்னா நான் பள்ளிக்கூடம் போக மாட்டேன்!” என்றான்.

அம்மா வந்தாள். மகனை அன்போடு அருகில் அழைத்தாள்.

“இதோ பாரப்பா! அப்பா சொல்றதைக் கேளு. உனக்கு ‘டிரம்ஸ்’ வாங்கிக் கொடுக்கறதுனாலே நமக்கு பணச் செலவு எதுவும் அதிகமாயிடாது! ஆனா ஒரு விஷயம்... நாங்க உனக்கு டிரம்ஸ் வாங்கிக் கொடுத்தா நீ ஓயாமல் அதை வாசித்துக் கொண்டே இருப்பாய். அது நம் வீட்டில் உள்ளவர்களுக்குத் தொந்தரவு தருவதாக இருக்கும்! அதனால்தான் டிரம்ஸ் இந்த நேரத்தில் வேண்டாம் என்று அப்பாவும் நானும் சொல்கிறோம்!”

“கவலைப்படாதீர்கள்... நான் யாருக்கும் தொந்தரவு கொடுக்காமல் டிரம்ஸ் வாசிப்பேன்!”

“அது எப்படி உன்னால் முடியும்?”

“வீட்டில் உள்ளவர்கள் எல்லாரும் தூங்கின பிறகுதான் நான் வாசிப்பேன்!”

இந்தக் குழந்தையின் மனோபாவம்தான் பெரியவர்கள் பலர் மத்தியிலும் பிரச்னைகளை உண்டு பண்ணிவிடுகிறது! எதிராளியின் பார்வையில் நம்மைப் பார்க்கப் பழகிக்கொள்ள வேண்டும். அந்தப் பழக்கம் இன்றைய மனிதர்களுக்கு வந்துவிட்டால், அதன் பிறகு இந்த உலகத்தில் எந்தக் குழப்பத்துக்கும் இடமிருக்காது!




# படித்த முட்டாள்கள்!

ஓர் இளைஞன். அவன் அறிவைப் பெருக்கிக்கொள்ள விரும்பினான். அதற்கு என்ன செய்ய வேண்டும்? படிக்க வேண்டும். எனவே, படித்தான். பல புத்தகங்களைப் புரட்டினான். பல விவரங்களைப் புரிந்துகொண்டான். விவசாயம் சம்பந்தமான புத்தகங்களைப் படித்தான்.

விதையை மண்ணில் ஊன்றித் தண்ணீர் ஊற்றினால் அது செடியாக வளரும் என்கிற உண்மையைத் தெரிந்து கொண்டான். அவனுக்குக் கோழி வளர்க்க வேண்டும் என்ற ஆசை வந்தது. உடனே புறப்பட்டு ஒரு சந்தைக்குப் போனான். பத்துக் கோழிக்குஞ்சுகள் வாங்கி வந்தான். அவை நன்றாக வளர வேண்டும். 'அதற்கு என்ன செய்யலாம்?' யோசித்தான்.

ஏற்கெனவே சேகரித்து வைத்திருந்த படிப்பறிவு அவனுக்குக் கைகொடுத்தது. அதன்படி செயல்பட்டான். தோட்டத்துக்குப் போனான். உழுதான். ஆங்காங்கே பத்துக் குழிகளைத் தோண்டினான். கோழிக்குஞ்சுகளின் தலையை மட்டும் அந்த குழிகளில் புதைத்தான். தண்ணீர் ஊற்றினான். மனநிறைவோடு வீட்டுக்கு வந்துவிட்டான்.

மறுநாள் காலை. தோட்டத்துப் பக்கம் போனான். அங்கே - அவன் புதைத்து வைத்த கோழிக்குஞ்சுகள் எல்லாம் இறந்திருந்தன. 'ஏன்... எப்படி' என்று கலங்கினான். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

யோசித்தான்.

'ஒரு வேளை இவை சொத்தைக் கோழிகளாக இருக்குமோ? அப்படித்தான் இருக்க வேண்டும்.'

மறுநாள் சந்தைக்குப் போனான்.



மிகவும் கவனமாக நல்ல கோழிக்குஞ்சுகளாகப் பார்த்துத் தேர்ந்தெடுத்தான்.

வீட்டுக்குக் கொண்டுவந்தான். பழைய மாதிரியே குழிகளைத் தோண்டினான். புதைத்தான்.

அந்தக் குஞ்சுகளும் இறந்துபோயின.

'குறை எங்கே இருக்கிறது?

அவனுக்குப் புரியவில்லை!'

விவசாயம் செய்துகொண்டிருக்கிற தன் நண்பன் ஒருவனுக்குக் கடிதம் எழுதினான்:

'நண்பா! என் தோட்டத்தில் எதைப் புதைத்தாலும் வளரமாட்டேன் என்கிறது... என்ன செய்யலாம்?'

அந்த நண்பன் விவரம் தெரிந்தவன். உடனே பதில் எழுதினான்:

'உன் தோட்டத்து மண்ணை உடனே சோதனைக்கு அனுப்பு!'

நண்பர்களே!

நமக்குப் படிப்பறிவு மட்டும் முக்கியமல்ல.

படிப்பறிவு எப்படிப் பயன்படுகிறது என்பது தான் முக்கியம்.

'பஞ்ச தந்திரம்' என்ன சொல்கிறது தெரியுமா?

'ஒருவன் சாஸ்திரங்களைக் கற்ற பிறகும் முட்டாளாக இருக்கக்கூடும்!'




# சிரமப்பட்டு குணமாக்கினால்...

ஒரு பெரியவரைச் சந்தித்தேன். ஏற்கெனவே பழக்கமானவர்தான். அவர் கையில் ஒரு புத்தகம் இருந்தது.

"என்னங்க அது?"

"பகவத் கீதை!"

"இதைப் பத்திப் பலரும் பலவிதமா பேசுறாங்களே?"

"எப்படிப் பேசுறாங்க?"

"சில பேர், கீதை பக்தியை போதிக்கறது அப்படின்னு சொல்றாங்க!"

"சரி!"

"சில பேர் என்ன சொல்றாங்கன்னா... செயல் அதாவது கர்மாதான் கீதையின் முக்கிய அம்சம் அப்படினு சொல்றாங்க!"

"சரி!"

"வேற சில பேர், ஞானம்தான் கீதை போதிக்கிற முக்கிய பாடம் - அப்படிங்கறாங்க!"

"ஆமாம்!"

"இதுலே யார் சொல்றதுங்க சரி?"

"யாருமே சரியாகச் சொல்லவில்லை!"

"அப்படின்னா நீங்களாவது அதைச் சரியாகச் சொல்லுங்களேன்!"

"கீதையின் முதல் சுலோகம் என்ன?"

"அதையும் நீங்கதான் சொல்லணும்!"

"தர்ம க்ஷேத்ரே குரு க்ஷேத்ரே..."

"சரி!"

"கடைசி சுலோகம் என்ன?"

"ஆரம்பமே தெரியலே... முடிவு எப்படித் தெரியும்?"

"அதையும் நானே சொல்றேன். 'த்ருவா நீதிர் மதிர் மம' என்று அது முடிகிறது!"

"சரி... இதையெல்லாம் எதுக்கு என்கிட்டே சொல்றீங்க?"

"கடைசி சுலோகத்தின் கடைசி வார்த்தையையும் முதல் சுலோகத்தின் முதல் வார்த்தையையும் இணைக்கும்போது கிடைப்பது 'மமதர்ம'. இதன் பொருள் 'உனது உண்மையான தர்மம்!' இதைத்தான் கீதை போதிக்கிறது."

"அப்படின்னா..?"

"உன் தர்மம் என்ன? நீ மனித வாழ்க்கை வாழ வேண்டும்... நீ மனிதப்பிறவிதான்; மிருகமல்ல என நினைவுபடுத்திக்கொள்!" இப்படிச் சொல்லிவிட்டு அந்தப் பெரியவர் போய்விட்டார்.



அதன்பிறகு யோசிக்க ஆரம்பித்தேன். உலகில் சொல்லப்படுகிற எல்லாவிதமான உபதேசங்களும் கடைசியாக ஒரு புள்ளியில்தான் வந்து முடிகின்றன. அது - 'மனிதன், மனிதனாக வாழ வேண்டும்' என்ற புள்ளிதான்!

இன்றைய மனிதன், தான் ஒரு 'மனிதன்' என்பதை முதலில் உணர வேண்டியிருக்கிறது!

ஒரு மனநல மருத்துவமனை. அங்கே ஒரு நோயாளி. மிகவும் சிரமப்பட்டு அவனைக் குணப்படுத்தினார்கள்.

சிகிச்சை செய்த ஸ்பெஷல் டாக்டர் கேட்டார். "இதோ பாரப்பா... இப்போ உனக்கு எந்தக் குறையுமில்லே... மகிழ்ச்சிதானே?"

"இல்லீங்க!"

"ஏன்?"

"ஆறு மாசத்துக்கு முன்னாடி நான் நெப்போலியனா, மாவீரன் மாதிரி இருந்தேன்... இப்போ சிகிச்சை செய்து குணமாக்கறேன், அது இதுன்னு

சொல்லிட்டு என்னை சாதாரண மனுசனா ஆக்கிட்டீங்களே!"



# நம்ப வேண்டிய கதை!

பணம் இல்லாதவனை மனைவியும் புறக்கணிப்பாள்!' என்கிறது நீதி சாஸ்திரம்.

ஓர் ஊரில் ஒரு பெண் இருந்தாள். அவள் ஒரு நாள் ஆவியுடன் பேசினாள்.

"என்ன... எப்படி இருக்கிறே?" என்றது ஆவி.

"நான் நல்லாத்தான் இருக்கிறேன்... ஆனாலும் உங்கள் பிரிவுதான் மனசுக்குக் கஷ்டமா இருக்கு. சரியா சாப்பிட முடியலே... தூங்க முடியலே!"

"அப்படியா...?"

"ஆமாம்... அது இருக்கட்டும். நீங்க எப்படி இருக்கீங்க?"

"நான் நல்லா இருக்கேன்!"

"எப்படி பொழுது போகுது?"

"எனக்கு வேண்டியவங்க நிறையப் பேர் இங்கே இருக்காங்க!"

"அதுசரி... உங்ககிட்டே முக்கியமா ஒரு விஷயம் கேக்கணும்!"

"என்ன அது?"

"நீங்க வேலைபார்த்த இடத்துலே சம்பள உயர்வு கேட்கச் சொன்னேனே... கேட்கவில்லையா?"

"கேட்டேனே..."

"அப்புறம் எப்படி இது..."

"என்ன சொல்றே?"

"உங்க பழைய சம்பளக் கணக்குப்படிதானே மூணு மாச சம்பளத்தை எனக்கு உதவித்தொகையா கொடுத்தாங்க?"

"இருக்காதே...!"

"என்ன இருக்காதே? உண்மையைச் சொல்லுங்க... சம்பள உயர்வு என்ன ஆச்சு?"



"இதோ பாரு... சம்பள உயர்வு கேட்கப் போய்த்தானே எனக்கு வேலை போச்சு... அந்த அதிர்ச்சியிலே தானே நான் செத்தேன்... அதுக்குள்ளே மறந்துட்டியா?"

"சரி, விடுங்க... அங்கே எல்லாம் நல்லபடியா இருக்குல்லே?"

"இங்கே நான் நிம்மதியா - மகிழ்ச்சியா இருக்கேன்!"

"நான் இல்லாம, நீங்க எப்படி மகிழ்ச்சியா இருக்கீங்க... பூலோகத்தைவிட சொர்க்கலோகம் அவ்வளவு மேலானதா?"

"சொர்க்கலோகமா! யார் சொன்னது நான் அங்கே இருக்கேன்னு?"

"அப்படின்னா..."

"நான்நரகத்துல தான் இருக்கேன். ஆனா நச்சரிப்பில்லாம இருக்கேன்!"

நண்பர்களே, இது நம்ப முடியாத கதைதான்!

என்றாலும், நம்ப வேண்டிய கதை.

பணத்தின் மீது பாசம் தேவை இல்லைதான்.

ஆனாலும் பற்று தேவை.

அது இல்லை என்றால், வாழ்க்கை என்கிற சக்கரம் சுலபமாகச் சுழலாது.

இது எக்காலத்துக்கும் பொருந்துகிற ஓர் உண்மைதான்.

ஆதிசங்கரர் சொல்லியிருப்பதை, இப்போது உங்கள் கவனத்துக்குக் கொண்டுவருகிறேன்.

'எதுவரை பொருள் தேடுவதில் ஒருவன் பற்றுள்ளவனாக இருக்கிறானோ... அதுவரை அவனுடைய சுற்றம் அவனிடம் ஆசை வைத்திருக்கும்!'



# அவசரமே கவலைக்கு காரணம்!

ஒரு பள்ளிக்கூடம்.

அது எப்படி நடைபெறுகிறது என்பதைப் பார்வையிட ஆய்வாளர் ஒருவர் வந்தார்.

முன்னறிவிப்பின்றி திடீரென்று வந்துவிட்டார்.

வகுப்பறைகளில் ஏகப்பட்ட கூச்சல்... குழப்பம். ஆய்வாளருக்குக் கோபம் வந்தது.

'இது என்ன கல்விக்கூடமா... சந்தைக்கூடமா?'

அவசரமாக ஒரு வகுப்பறையில் நுழைந்தார்.

இவரைப் பற்றி அவர்கள் யாரும் கவலைப் படுவதாகத் தெரியவில்லை. கூச்சல் அதிகமாகிக் கொண்டிருந்ததே தவிர குறையவில்லை.

அந்தக் கூச்சலைப் போலவே ஆய்வாளரின் கோபமும் அதிகமானதே தவிர, குறையவில்லை.

இப்போது என்ன செய்வது? அவருக்கு ஒன்றும் புரியவில்லை.

சத்தம் போட்டுக் கொண்டிருந்தவர்களின் மத்தியில் கொஞ்சம் உயரமாகத் தெரிந்த ஒருவரின் சட்டையைப் பிடித்து வெளியே இழுத்துக் கொண்டு வந்தார்.

"சார்... சார்... அது... வந்து..."

"வாயை மூடு... பேசினால் நான் பொல்லாதவன் ஆகிடுவேன்!"

சட்டையைப் பிடித்து இழுத்துக்கொண்டே தலைமை ஆசிரியரின் அறைக்குள் நுழைந்தார் ஆய்வாளர். அங்கேயும் சோகம் பாருங்கள், இவர் போன நேரம் தலைமை ஆசிரியர் தன் அறையில் இல்லை.

ஆய்வாளரின் பரபரப்பு அதிகமாயிற்று.

இதற்கிடையே அந்த அறையின் வாசலில் ஏதோ கூச்சல்... குழப்பம்!

"இங்கேயும் என்ன கலாட்டா?" என்று கத்தியபடியே ஆய்வாளர் வெளியே

வந்தார்.

ஒரு ஐம்பது பேர் கூட்டமாக அங்கே நின்று கொண்டிருந்தார்கள்.

வெளியே வந்த ஆய்வாளர் கேட்டார்: "யாரு நீங்க எல்லாம்?"

"நாங்க எல்லாரும் ஆறாம் வகுப்பு படிக்கிற மாணவர்கள்!"

"எதுக்காக இப்படி இங்கேயும் வந்து 'காச் மூச்'சுன்னு கூச்சல் போடறீங்க?"

"சார், அது... அது... வந்து..."

"என்ன வந்து... போயி? எதுவா இருந்தாலும் உங்க வகுப்பு ஆசிரியரை இங்கே வரச் சொல்லுங்க! அவர்ட்ட நான் பேசறேன்"



"அதுதான் சார்... முடியாத காரியம்!"

"என்னது, முடியாத காரியமா? என்ன சொல்றீங்க?"

"இப்ப சட்டையைப் பிடிச்சு இழுத்துக்கிட்டு வந்தீங்களே... அவர்தான் எங்க வகுப்பு ஆசிரியர்!"

ஆய்வாளர் அதிர்ச்சிக்குள்ளாகிறார்.

அறிவு, கண்களைத் திறக்கிறது. ஆத்திரம், அதை மூடிவிடுகிறது. அதன் விளைவாக - அணுகுமுறை திசைமாறிப் போகிறது.

அவசரம்தான் கவலைக்குக் காரணம் என்கிறார்கள் பெரியவர்கள்.

துடிதுடிப்பாக இருப்பது மேலானது.

அவசரமாக இருப்பது ஆபத்தானது.

இதை நன்றாக உணர்ந்து கொள்ளுங்கள். உங்கள் மனதுக்கும் இந்த விஷயத்தைச் சொல்லிவையுங்கள்!




# 'டாக்டர்... ரொம்ப அவசரம்!'

நள்ளிரவு நேரம். ஒரு டாக்டரின் வீடு.

யாரோ கதவைத் தட்டுகிறார்கள்.

பாதித் தூக்கத்தில் இருந்த அந்த டாக்டர், எழுந்து வந்து கதவைத் திறக்கிறார்.

வெளியே ஒருவர் நின்றுகொண்டிருக்கிறார்.

அவர் கையில் ஒரு காகிதம்.

டாக்டர் அதைக் கவனிக்கிறார்.

"என்ன வேண்டும் உங்களுக்கு? என் உதவி ஏதாவது தேவையா?"

"ஆமாம் டாக்டர்!"

"சொல்லுங்கள்!"

"இதோ, இந்த முகவரிக்கு நீங்கள் வரவேண்டும்... ரொம்ப அவசரம்!"

"அப்படியா... இதோ வருகிறேன்..!"

அவசரமாக டாக்டர் புறப்படுகிறார்.

இருவரும் வெளியே வருகிறார்கள்.

டாக்டர் தனது காரை எடுத்துக்கொண்டு வருகிறார்.

அழைக்க வந்தவர் ஏறி உட்காருகிறார்.

கார் வேகமாக விரைகிறது.

அவர் சொன்ன இடத்துக்கு வந்து சேர்ந்தது.

இருவரும் இறங்கினார்கள்.

இப்போது அழைக்க வந்த அந்த நபர் டாக்டரைப் பார்த்துக் கேட்கிறார்.

"டாக்டர்! உங்கள் விசிட்டிங் ஃபீஸ் எவ்வளவு?"

"ஐம்பது ரூபாய்!"

"இந்தாருங்கள், ஐம்பது ரூபாய். ரொம்ப தாங்க்ஸ் டாக்டர்! அங்கேயிருந்து இங்கே வர டாக்ஸிக்காரர் நூறு ரூபாய் கேட்டார்!"



பணத்தைக் கொடுத்துவிட்டு அந்த ஆள் பாட்டுக்கு நடக்க ஆரம்பித்துவிட்டான்!

இன்றைய மனிதனுக்கு அவன் ஓர் உதாரணம்.

அதனால்தான் நமக்கு வழிகாட்டுகிற பெரியவர்கள் சொல்கிறார்கள்:

"இரக்கப்படு... ஆனால், ஏமாந்து போகாதே!"

இந்த உலகம் ஒரு மருத்துவமனை. இதில் மனிதன் ஒரு நோயாளி.

ஆனாலும் இதில் ஒரு வேடிக்கை.

அது என்னவென்றால்...

ஒவ்வொரு நோயாளியும் அடுத்தவன் படுக்கையிலேயே படுத்துக்கொள்ள ஆசைப்படுகிறான்.

சுயநலம் இருக்கிறவரையில் மனிதனின் சுயஉருவம் தெரிய வராது.



# கணவர் எங்கே?

ஓர் ஊரில் ஒரு கணவன் - மனைவி.

அவர்களுக்கு ரொம்ப நாட்களாகவே ஒரு கவலை இருந்து வந்தது. அதாவது அவர்களுக்குக் குழந்தை இல்லை.

என்ன செய்வது என்று யோசித்தவர்கள் கடைசியில் ஒரு முடிவுக்கு வந்தார்கள். அதன்படி ஓர் ஆன்மிகப் பெரியவரைப் போய்ப் பார்த்தார்கள்.

"ஐயா! எங்களுக்காக நீங்கள் பிரார்த்தனை செய்ய வேண்டும்!" என்று கேட்டுக் கொண்டார்கள்.

அவர் சொன்னார்:

"கவலைப்படாதீர்கள்... இப்போது நான் ஒரு புனிதமான இடத்துக்குத்தான் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன். அந்த இடம் வெளிநாட்டில் இருக்கிறது. அங்கே புகழ்பெற்ற ஒரு ஆலயம் இருக்கிறது.

அந்த ஆலயத்தில் விளக்கேற்றி வைத்தால் குழந்தை பிறக்கும். நான் அங்கே சென்றவுடன் உங்களுக்காக விளக்கேற்றி வைத்துப் பிரார்த்தனை செய்கிறேன்!"

தம்பதி மகிழ்வோடு திரும்பி வந்தார்கள்.

அந்தப் பெரியவர் வெளிநாடு புறப்பட்டுப் போனார். மூன்றாண்டுகளுக்குப் பிறகு திரும்பி வந்தார்.

அந்தப் பெண்ணைச் சந்தித்தார்.

"என்ன ஆயிற்று?" என்று விசாரித்தார்.

"ஐயா... எனக்கு அடுத்தடுத்து இரட்டைப் பிரசவங்கள்... இப்போதும் வயிற்றில்...!"

பெரியவருக்கு மகிழ்ச்சி.

"பரவாயில்லையே! நான் அங்கே விளக்கேற்றி வைத்தது இங்கே நல்ல பலனைக் கொடுத்திருக்கிறதே...! உங்கள் கணவர் எங்கே? உடனே அவரை நான் வாழ்த்த வேண்டும்!"

"அவர் இங்கு இல்லையே...!"

"வேறு எங்கே?"

“நீங்கள் போய் வந்த அதே இடத்துக்குத் தான் அவசரமாகப் புறப்பட்டு ஓடியிருக்கிறார்!”

“ஏன்?”

“நீங்கள் ஏற்றி வைத்த விளக்கை அணைத்துவிட்டு வருவதற்காக!”

நண்பர்களே!

ஆன்மிக நம்பிக்கை இப்படித்தான் சில சமயங்களில் நம்மை அங்குமிங்குமாக ஓட வைத்துவிடுகிறது. உண்மையை உணர்ந்து கொள்கிற வரையில் இந்த ஓட்டங்கள் நிற்கப் போவதில்லை.



விளக்கேற்றுவது எதற்காக?

வழிபாடு செய்வது எதற்காக?

முஸ்லிம்கள் ஊதுவத்தி கொளுத்துகிறார்கள்.

கிறிஸ்தவர்கள் மெழுகுவத்தி கொளுத்துகிறார்கள். இந்துக்கள் சூடம் கொளுத்து கிறார்கள்.

வழிபாடு முடிந்து கண்களைத் திறக்கிறபோது

ஊதுவத்தி இருக்காது.

மெழுகுவத்தி இருக்காது.

சூடமும் இருக்காது.

அவை எல்லாமும் தம்மைத்தாமே எரித்துக் கொண்டிருக்கும்.

நாம் உணர்ந்துகொள்ள வேண்டிய உண்மை -

‘தன்னலமற்ற தியாகம்!’




# வாங்காத பசுமாடும் வளர்கிற வம்புகளும்!

ஓர் ஊரில் ஒருவன் இருந்தான். வேலைவெட்டி எதுவும் இல்லாமல் சும்மாவே இருந்தான். அவனுக்குக் கல்யாணம் பண்ணி வைத்தார்கள். மனைவி வந்து சேர்ந்தாள்.

"சும்மாவே உட்கார்ந்திருக்கியே... ஏதாவது சம்பாதிக்கிற வழியைப் பாரு!" என்றாள்.

"அதுக்குத்தான் யோசனை பண்ணிட்டிருக்கேன். ஓர் அருமையான ஐடியா!" என்றான்.

"என்ன அது... சொல்லு!" என்றாள் ஆவலோடு.

"ஆட்டுக்குட்டி வாங்கப் போறேன்!"

"வாங்கி என்ன செய்வே?"

"குட்டி வளரும். பெரிசாகும். அது நிறைய குட்டி போடும்!"

"அப்புறம்?"

"அதையெல்லாம் சந்தையிலே கொண்டுபோய் வித்துட்டு அந்தக் காசுக்கு ஓர் எருமை மாடு வாங்குவேன்!"

"அது எதுக்கு?"

"எருமைமாடு நிறைய பால் கொடுக்கும். அதைக் கொண்டு போய் பால் பண்ணையிலே கொடுப்பேன். அல்லது நானே விற்பேன். கைநிறையக் காசு கிடைக்கும். அதுக்கப்புறம் ஒரு பசுமாடு வாங்குவேன். பாலை விற்கலாம். நாம காபி போட்டும் சாப்பிடலாம்!"

"அப்பிடியே அடுத்த தெருவுலே இருக்கிற எங்க அம்மா வீட்டுக்கும் கொஞ்சம் பால் கொடுத்து அனுப்பலாம்!" என்றாள் மனைவி.

கணவனுக்கு பொசுக்கென்று கோபம் வந்துவிட்டது. "அது எப்படி? உங்க அம்மா வீட்டுக்கு எதுக்குக் கொடுக்கணும்? அதெல்லாம் முடியாது!"

இந்த இடத்தில் சண்டை ஆரம்பமாகிவிட்டது. கொஞ்ச நேரத்தில் இரண்டு பேரும் சத்தம் போட ஆரம்பித்து விட்டார்கள்.

கடுமையான சண்டை நடப்பதை அறிந்து பக்கத்து வீட்டுக்காரன் ஓடி வந்தான். வாங்காத மாட்டுக்காக இவர்கள் இப்படிச் சண்டை போட்டுக் கொள்கிறார்கள் என்பது அவனுக்குத் தெரியும்! பக்கத்து வீட்டுக்காரன் சொன்னான்: "ஏன்டா? உன் பசுமாட்டை கட்டிப் போடக் கூடாதா?"

"என்னடா சொல்றே?"

"உன் மாடு என் தோட்டத்துலே மேஞ்சுட்டுது. பயிர்லாம் நாசமாயிட்டுது. பத்தாயிரம் ரூபாய் அளவுக்கு சேதம்! அதை வாங்கிட்டுப் போறதுக்குத்தான் வந்தேன்!"



இவன் அரண்டு போனான். பிறகு சொன்னான்: "டேய்! நான் இன்னும் மாடே வாங்கலையே... அதுக்கு உள்ளே அது வந்து உன் தோட்டத்துலே எப்படி மேயும்? என்னடா உளர்றே?"

"நீதான்டா இப்போ உளறிக்கிட்டிருக்கே! மாடே வாங்கலை. அதுக்குள்ளே எப்படிடா உன் மனைவி அவங்க அம்மா வீட்டுக்குப் பால் கொடுத்தனுப்ப முடியும்?"

நம்ம ஆளுக்கு இப்போதுதான் புத்தி வந்தது. இல்லாத விஷயங்களுக்காக இப்படிச் சண்டை போட்டு, இன்றைக்கு இல்லறத்தை வீணாக்குகிற மனிதர்கள் நிறையப் பேர் இருக்கிறார்கள்.

ஒருவன் தன் மனைவியைப் பற்றி, மாமனாரிடம் புகார் சொன்னான்: "மாமா! உங்க பொண்ணு அர்த்தமில்லாம சண்டை போடுறா? எதுக்கெடுத்தாலும் எடுத்தெறிஞ்சு பேசுறா?"

"நீங்க எப்படி மாப்பிள்ளை சமாளிக்கிறீங்க?"

"அவ எடுத்தெறியறது என் மேலே படாம ஒதுங்கி நின்னுக்கிறேன்...!"




# உங்கள் மனம் குதிரையா? ஒட்டகமா?

ஓர் ஊரில் பெரிய மனிதர் ஒருவர் இருந்தார். அவருக்குத் திடீரென்று ஒரு நாள் நெஞ்சுவலி வந்தது. அருகில் இருந்தவர்கள் பயந்து போனார்கள். மெதுவாக அவருடைய அறைக்குள் அழைத்துச் சென்று படுக்க வைத்தனர். தொலைபேசி வாயிலாக குடும்ப டாக்டருக்கு தகவல் போனது.

கொஞ்ச நேரத்தில் மிகுந்த பரபரப்போடு டாக்டர் வந்து சேர்ந்தார். அவர் கையில் ஒரு பெரிய மருந்துப்பெட்டி!

வரும்போதே கேட்டார்: "நோயாளி எங்கே?"

"அதோ, அந்த அறையில் படுக்க வைத்திருக்கிறோம் டாக்டர்!"

"சரி, நான் அங்கே போறேன். வேற யாரும் உள்ளே வரக்கூடாது. கொஞ்சம் ஒத்துழைங்க. அப்பத்தான் சரியான முறையில சிகிச்சை கொடுக்க முடியும்!"

"சரிங்க டாக்டர்!"

டாக்டர் அவசரமாக அந்த அறைக்குள் சென்று கதவை மூடிக்கொண்டார்.

உறவினர்கள் எல்லாரும் வெளியே உட்கார்ந்திருந்தனர். உள்ளே என்ன நடக்கிறது என்பது தெரியவில்லை. ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருச் சிந்தனை. கொஞ்ச நேரம் ஆயிற்று. அவசரமாக கதவு திறக்கப்படும் சத்தம். எல்லாரும் நிமிர்ந்து பார்த்தார்கள்.

டாக்டர் எட்டிப் பார்த்தார். அவர் முகத்தில் வியர்வை அரும்புகள். "ஒரு ஆணி இருந்தா கொடுங்களேன்!"

ஒருவர் எழுந்து ஓடிப்போய் இரண்டங்குல ஆணி ஒன்றைக் கொண்டுவந்து கொடுத்தார். அதை வாங்கிய டாக்டர் கதவை மூடிவிட்டார். வெளியே இருந்தவர்கள் யோசித்தார்கள். 'இவருக்கு எதுக்கு இரண்டு அங்குல ஆணி?'

உள்ளே ஏதோ கடாமுடாவென்று சத்தம். என்ன நடக்கிறது உள்ளே..?

இதற்குள் மறுபடியும் கதவு திறக்கப்பட்டது. டாக்டரின் முகம் தெரிந்தது. முன்பைக் காட்டிலும் அதிக வியர்வை. "ஒரு சுத்தியல் இருந்தா கொண்டுவாங்க!"

மறுபடி எழுந்து ஓடி, கொஞ்ச நேரம் தேடி ஒரு சுத்தியலைக் கொண்டுவந்து கொடுத்தார்கள். அவசரமாக அதை வாங்கிக்கொண்டு கதவை மூடிக்கொண்டார் டாக்டர்.

உள்ளேயிருந்து ஏதோ உடைபடுகிற சத்தம். காத்திருந்தவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. கவலை அதிகமானது. இந்த நேரத்தில் மறுபடியும் கதவு திறக்கப்பட்டது. டாக்டர் சிரித்தபடியே வெளியே வந்தார்.



"சக்சஸ்! எல்லாம் நல்லபடியாக முடிந்தது. இனிமே ஒண்ணும் கவலை இல்லை!"

"என்ன சொல்றீங்க டாக்டர்?"

"நான் எடுத்துட்டு வந்த மருந்துப் பெட்டியைத் திறந்துட்டேன். இனிமே சிகிச்சையை ஆரம்பிச்சுடலாம்!"

இப்படிச் சொல்லிக்கொண்டே அந்த டாக்டர் நிதானமாக அந்த அறைக்குள் நுழைந்தாராம்! இது எப்படி இருக்கு?

இப்படித்தான் இருக்கிறது நமது மனம்!

அவசரப்படுவதன் மூலமாகவே மனம் அறிவை விட்டு வெகுதூரம் விலகிவந்துவிடுகிறது. இதன் காரணமாக எது உண்மை என்பதைப் புரிந்து கொள்ள அதற்கு அதிக நேரமாகிறது.

சுறுசுறுப்பாக இருப்பது என்பது நல்லது; அவசரப்படுவது என்பது நல்லதல்ல.

மனதை அதன்போக்கில் யோசிக்க விட்டு விடாதீர்கள்.

சா அதி சொல்கிறார்: "கொஞ்ச தூரம் தாவி ஓடி இளைத்துப் போகும் அரபுக்குதிரையைவிட, சேர்ந்தாற்போல நிதானமாக நடக்கும் ஒட்டகம் வனாந்திரத்தை எளிதில் கடக்கிறது!"

இந்த வகையில் - நமது மனம் ஒட்டகம் ஆகட்டும்!



# ஆலயம் சுற்றினால் ஆன்மிகவாதியா?

"என்னைப் போல ஓர் ஆன்மிகவாதியை வேறு எங்கேயும் உங்களால் பார்க்க முடியாது!" என்று தன்னைப் பற்றியே பெருமையாகச் சொல்லி கொண்டிருந்தார் ஒருவர்.

"எதனால் அப்படிச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டேன்.

"நாற்பது வருட காலமாக நாள் தவறாமல் கோயிலுக்குப் போய் வந்துகொண்டிருக்கிறேன்" என்றார் அவர்.

"ஆலயத்துக்குச் சென்று வந்தால் ஆன்மிகவாதியா?"

"பின்னே இல்லையா?"

"அப்படியென்றால் தலையாட்டத் தெரிந்தவர்கள் எல்லாரும் சங்கீத ரசிகர்களா?"

"என்ன சொல்கிறீர்கள்?"

"இப்படி உட்காருங்கள். உங்களுக்கு ஒரு கதை சொல்கிறேன்!"

"...ம். சொல்லுங்க!"

"ஒரு தேசத்தில் ஓர் அரசன் இருந்தான். அவனுக்கு இசைஞானம் கொஞ்சமும் கிடையாது. ஆனாலும் அது இருப்பதாகக் காட்டிக்கொள்வதில் அவனுக்கு விருப்பம் அதிகம்.

அதற்காகவே அவ்வப்போது சில இசை நிகழ்ச்சிகளுக்கு அவன் ஏற்பாடு செய்வான். பல தேசங்களில் உள்ள இசை வல்லுநர்களை வரவழைப்பான். மக்கள் முன்னிலையில் அவர்களைப்பாடச் சொல்லுவான்.

இவன் முன்வரிசையில் உட்கார்ந்து அதை மிகவும் ரசிப்பதுபோல பாவனை செய்து கொண்டு இருப்பான். இதற்காக ரகசிய ஏற்பாடு ஒன்றைச் செய்துகொண்டிருந்தான்.

மேடையிலே சங்கீத வித்வான் பாடிக் கொண்டிருப்பார். எதிரே மன்னன்

அமர்ந்திருப்பான். கீழே கறுப்புக் கம்பளி விரிக்கப்பட்டிருக்கும். மன்னனின் கால் கட்டைவிரலில் ஒரு கறுப்புக் கயிறு கட்டப்பட்டிருக்கும். அந்தக் கயிறு கம்பளி விரிப்புக்குக் கீழே கொண்டு சொல்லப்பட்டு... அதன் இன்னொரு முனை திரைக்குப் பின்னால் இருக்கும் அமைச்சரின் கையில் இருக்கும்.

அந்த அமைச்சருக்கு இசைஞானம் உண்டு. அவர் கயிற்றைப் பிடித்தபடி நின்றுகொண்டிருப்பார். வித்வான் சிறப்பாகப் பாடுகிறபோதெல்லாம் அமைச்சர் கயிற்றை அசைப்பார். உடனே மன்னர் அதை உணர்ந்துகொண்டு 'ஆகா... பிரமாதம்' என்று சொல்லி தலையைப் பலமாக ஆட்டுவார்.

பாடுகிறவர் இதைப் பார்த்து பரவசமடைவார். மன்னரின் இசைஞானம் கண்டு மக்களும் பிரமித்துப் போவார்கள்.

இது இப்படியே நடந்து கொண்டிருந்தது.

ஒரு முறை இசைவாணர் மிக உயர்வாகப் பாடிக் கொண்டிருந்தார்.

ஒரு முக்கியமான கட்டம். அமைச்சர் கயிற்றை பலமாக இழுத்தார். கயிறு அறுந்துவிட்டது!

மன்னர் உடனே எழுந்து நின்றார். "பாடகரே! பாடுவதைக் கொஞ்சம் நிறுத்துங்கள். கயிறு அறுந்துவிட்டது. அதைக் கட்டிக் கொள்கிறேன்!"

இந்தக் கதையைக் கேட்டவுடன் அந்த ஆன்மிகவாதியும் கொஞ்சம் யோசிக்க ஆரம்பித்தார்.

இந்த உலகம், தலையாட்டுகிறவர்களையெல்லாம் சங்கீத ரசிகர்கள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறது. ஆலயத்தில் சுற்றுகிறவர்களையெல்லாம் ஆன்மிகவாதிகள் என்று நினைத்துக் கொண்டிருக்கிறது.

இசையில் ஆழ்ந்துவிடுகிறபோது அசைவது நின்றுபோகும்.

இறைத்தன்மையில் மூழ்கிவிடுகிறபோது, வழிபாடு விடை பெற்றுக் கொள்ளும்.

ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள்...

ஆற்றைக் கடந்தவனுக்கு ஓடம் தேவை இல்லை.

ஆன்மிகத்தைத் தொட்டவனுக்கு ஆலயம் தேவை இல்லை!



# அன்பின் இயல்பு!

"நமக்குக் கல்யாணம் ஆகி எவ்வளவு காலம் ஆச்சு? ஒரு நாளாவது ஆசையா ஒரு சினிமாவுக்குக் கூட்டிட்டுப் போனதுண்டா?"

"சரி... இன்னிக்கே அந்தக் குறையைத் தீர்த்து வைக்கிறேன். கிளம்பு!"

கணவனும் மனைவியும் புறப்பட்டார்கள். ஒரு திரையரங்கைத் தேடிப் போனார்கள். உயர் வகுப்பு... முதல் வரிசை. உட்கார்ந்தார்கள்.

படம் ஓடத் தொடங்கியது. கதாநாயகனும் கதாநாயகியும் கட்டிப்பிடித்துக் காதல் செய்தார்கள். மனைவி முணுமுணுத்தாள், கணவனின் காதோரமாக...

"நீங்கள், இப்படியெல்லாம் செய்ததே கிடையாது!"

"உனக்கு ஓர் உண்மை புரியலை!"

"என்ன உண்மை?"

"இது சினிமா, நிஜமல்ல... வெறும் நடிப்பு!"

"உங்களுக்குத்தான் உண்மை புரியலை!"

"என்ன சொல்றே?"

"அவங்க ரெண்டு பேரும் நிஜ வாழ்க்கையிலும் கணவன்_ மனைவி!"

கணவன் சொன்னான்:

"ஓ..! அப்படின்னா அந்தக் கதாநாயகன் உண்மையிலேயே பிரமாதமாக நடிக்கிறார்! ஏன்னா, நிஜ மனைவிகிட்டே இவ்வளவு பிரியமா நடந்துக்கறது கஷ்டம்!"

காதலிக்கிறபோது அன்பு ஆழமானதாகத் தோன்றுகிறது. கல்யாணம் ஆகிறவரையில்கூட அது அப்படியேதான் இருக்கிறது.

கவர்ச்சி குறையக் குறைய காதலின் ஆழமும் குறைந்து கொண்டே வருகிறது.



அப்படியானால், அன்பு என்பது நிரந்தரமானது இல்லையா? இந்தக் கேள்விக்கு ஞானிகள் என்ன பதில் சொல்லுகிறார்கள்?

"உங்கள் மனம் சம்பந்தப்பட்ட அன்பு, கனவுகள் நிரம்பியது" என்கிறார் ஓஷோ.

கனவுகள் ஒருபோதும் உண்மையாகாது. முதலில் மனதிலிருந்து விடுதலை அடையுங்கள். அது கொடுக்கும் அன்பை உதறி எறியுங்கள். அது போலியானது. மனதின் வழியே சென்றால், உண்மையான அன்பைப் பற்றி, உங்களுக்கு ஒன்றும் தெரியாது. தியானத்தின் மூலமாகத்தான் அதை உணர முடியும்.

அடுத்து, உங்கள் அன்பு ஒரே மாதிரியாக நிலைத்து நிற்க வேண்டும் என்று நீங்கள் ஆசைப்படுகிறீர்கள். அது தவறான கருத்து.

அன்பின் இயல்பே, ஆறுபோல் ஓடக் கூடியது. வேண்டுமானால், ஆறு என்பது நிரந்தரத் தோற்றத்தைக் கொடுக்கலாம். ஆனால், அதில் ஓடும் தண்ணீர் ஒருக்காலும் நிரந்தரமாக இருக்காது. இந்த வித்தியாசத்தைப் புரிந்து கொள்ளுங்கள்!



# அவளும் அர்ச்சகர்தானே!

அது ஓர் அழகிய தீவு. அங்கே ஓர் ஆலயம் இருந்தது. ஐந்து அர்ச்சகர்கள் இருந்தார்கள். அவர்கள் ஆலய நிர்வாகக் குழுவினரால் நியமிக்கப்பட்டவர்கள்.

ஒரு கட்டத்தில் அந்தக் கோயிலுக்கு இன்னொரு அர்ச்சகரும் தேவைப்பட்டார்.

யாரை நியமிப்பது?

ஆலய நிர்வாகக்குழு கூடியது. ஒரு பெண் அர்ச்சகரை நியமிக்கலாம் என்று முடிவு செய்தார்கள். ஒரு பெண்ணை அர்ச்சகராக நியமிப்பது இதுதான் முதல் முறை.

தகுதியான ஒரு பெண்மணி அர்ச்சகராக நியமிக்கப்பட்டார். அந்தப் பெண்மணிக்கு ஆன்மீக அறிவு அதிகம். ஆகவே பணிவும் அதிகம். அங்கேயிருந்த ஆண் அர்ச்சகர்களுக்கு இது பிடிக்கவில்லை.

'ஒரு பெண் அர்ச்சகராக வருவதா? இது சரியாக இருக்குமா?

சாஸ்திரம் ஒப்புக்கொள்ளுமா?'

இப்படியெல்லாம் அவர்கள் தங்களுக்குள் முணுமுணுக்க ஆரம்பித்துவிட்டார்கள். அந்தப் பெண்ணைப் பார்க்கிறபோதெல்லாம் முகத்தைத் திருப்பிக்கொண்டார்கள்.

அவர்கள் மனம் அமைதியை இழந்தது. படுத்தால் தூக்கம் வருவதில்லை.

என்ன செய்வது?

ஆலய நிர்வாகம் செய்த முடிவு அது. வெளிப்படையாக ஏதும் பேசமுடியவில்லை. அழுக்காறு என்கிற தீ மனசுக்குள் சுடர்விட ஆரம்பித்துவிட்டது.

இந்தச் சமயத்தில் - பக்கத்தில் இருந்த ஒரு தீவில் ஓர் ஆன்மீகக் கூட்டம்.

இவர்களுக்கு அழைப்பு வந்தது - 'எல்லோரும் வாருங்கள்!' என்று.

அர்ச்சகர்கள் ஐந்து பேரும் புறப்பட்டார்கள் வேண்டுமென்றே அந்தப் பெண் அர்ச்சகரை அவர்கள் அழைக்கவில்லை.

அந்த பெண்ணுக்குத் தெரியாமலே ரகசியமாகப் புறப்பட்டுப் படகுத்துறைக்கு வந்து சேர்ந்தார்கள். அங்கே ஓர் அதிர்ச்சி!

அந்தப் பெண் அர்ச்சகர் ஏற்கெனவே அங்கே வந்து படகில் ஏறி உட்கார்ந்து கொண்டிருக்கிறார்!

அவர்கள் முகத்தில் 'எள்ளும் கொள்ளும்' வெடித்தது. உதடுதுடித்தது.

ஒருவர் முணுமுணுத்தார் - 'இது இங்கேயும் வந்துட்டுதா?'

எல்லாரும் அந்தப் பெண்ணை ஏளனமாகவே பார்த்தார்கள். 'இதுக்கு என்ன தெரியும்?' என்கிற அலட்சியம்!

படகு புறப்பட்டது! அடுத்த தீவுக்குப் போய்ச் சேர மூன்று மணி நேரம் ஆகும்.

இரண்டு மணிநேரம் கடந்த நிலையில் திடீரென படகு நின்றது.

"என்ன ஆயிற்று?" ஒருவர் கத்தினார்.

"டீசல் தீர்ந்துபோச்சு!" என்றார் படகு ஓட்டுநர்.

"இப்ப என்ன செய்யறது?" எல்லாரும் தவித்தார்கள்.

இப்போது அந்தப் பெண்மணி எழுந்தார்: "சகோதரர்களே! கவலைப்படாதீர்கள்! நான் போய் டீசல் வாங்கிக்கொண்டு வருகிறேன்!"

"அது எப்படி முடியும்?"

"இதோ பாருங்கள்" என்று சொல்லிவிட்டு தண்ணீரின் மேல் நடக்க ஆரம்பித்தார். அர்ச்சகர்கள் ஒரு கணம் திகைத்தார்கள். ஆனாலும் உடனே சுதாரித்துக்கொண்டு சொன்னார்களாம்: "பார்த்தீங்களா? தண்ணிமேலே நடப்பதை! ஹும்... அவளுக்கு நீச்சல்கூடத் தெரியவில்லை!"

மனசுக்கு ஒருத்தரைப் பிடித்துப்போனால் அவர்கள் எது செய்தாலும் அது அதிசயமாகத் தோன்றும். ஒருத்தரைப் பிடிக்கவில்லையென்றால் அவர் செய்வது அதிசயமே ஆனாலும் அது சாதாரணமாகத்தான் தெரியும்!

ஓர் உண்மை என்ன தெரியுமா?

அழகாக இருக்கிற பொருளைத்தான் நீங்கள் விரும்புகிறீர்கள் என்பதல்ல...

நீங்கள் விரும்புகிற பொருள் உங்களுக்கு அழகாக இருக்கிறது, அவ்வளவுதான்!




# அந்த ‘வயிறு’ யார் தெரியுமா?

ஒரு போட்டி நடந்தது.

என்ன போட்டி தெரியுமா?

ஒரே மூச்சில் நூறு இட்லிகளைச் சாப்பிட வேண்டும். பல பேர் பாதியிலேயே விலகிக் கொண்டார்கள். ஒருவன் மட்டும் விடாமல் தொடர்ந்து சாப்பிட்டுக்கொண்டே இருக்கிறான்.

இவன் சாப்பிடச் சாப்பிட... இன்னொருவன் ஒரு கரும்பலகையில் சாக்பீஸால் ஒரு இட்லிக்கு ஒரு கோடு வீதமாகப் போட்டுக் கொண்டே இருக்கிறான்.

ஒரு கட்டத்தில் கரும்பலகையில் இடமில்லை. அதைப் பற்றி, சாப்பிடுகிறவனுக்குக் கவலை இல்லை. கோடு போடுகிறவனுக்குத்தான் கவலை! சாப்பிடுகிறவன், எதைப் பற்றியும் கவலைப்படாமல் சாப்பிட்டுக் கொண்டே இருக்கிறான்.

கோடு போடுகிறவன் கரும்பலகையைக் கவலையோடு பார்த்தான். 99 கோடுகள் போட்டாயிற்று. இன்னொரு கோட்டுக்கு இடமில்லை. யாருக்கும் தெரியாமல் ஏற்கெனவே போட்டசில கோடுகளை அழித்துவிட்டு... மறுபடியும் தொடர்ந்து போட ஆரம்பித்தான். ‘நூறு இட்லிகள், சாப்பிடும் போட்டி’ என்பது நூறையும் தாண்டிப் போய்க்கொண்டிருந்தது.

சாப்பிடுகிறவனைப் பரிதாபமாகப் பார்த்தான் கோடு போடுகிறவன். சாப்பிடுகிறவன் நிறுத்துவதாகத் தெரியவில்லை.

அவனுக்குக் கோடுகளைப் பற்றிக் கவலை இல்லை. ஆகவே, அவன் அண்ணாந்து பார்க்கவே இல்லை. இது கோடு போடுகிறவனுக்கு வசதியாகப் போயிற்று



சாமர்த்தியமாக ஒரு கோட்டை அழிப்பது... மறுபடி அதன் மீதே இன்னொரு கோடு போடுவது... இப்படியே சமாளித்துக் கொண்டிருந்தான்.

அந்த சாப்பாட்டு ராமன், இது தெரியாமல் மதியம் வரை சாப்பிட்டுக் கொண்டே இருக்கிறான். கடைசியாக ஒரு கட்டத்தில் அவன் ஏதோ யோசிக்க ஆரம்பித்தான்.

கோடு போடுகிறவன் கேட்டான்: "என்ன யோசிக்கிறே..?"

"நீ செய்யறது எனக்கு என்னமோ சந்தேகமா இருக்கு!"

"நான் ஒழுங்காத்தானே கோடு போட்டுக்கிட்டு வர்றேன்!"

சாப்பிடுகிறவன் சொன்னான்: "அதெல்லாம் ஒண்ணும் வேணாம்... எல்லாக் கோட்டையும் அழிச்சுடு... மறுபடியும் முதல்லேயிருந்து வரலாம்!"

நண்பர்களே...

அதிர்ச்சியடையாதீர்கள்.

எல்லையில்லாமல் இட்லிகளை உள்வாங்கிக் கொண்டிருக்கிற அந்த 'வயிறு' யார் தெரியுமா?

அதன் பெயர்: பேராசை!

சாஅதி சொல்கிறார்: 'பேராசைக்காரனுக்கு உலகமெல்லாம் தந்தாலும்கூட பசி தீராது. மனத் திருப்தியுள்ளவனுக்கு ஒரு துண்டு ரொட்டியே போதுமானது!"



# மயக்கமா? குழப்பமா?

'மனம் சொல்கிறபடியெல்லாம் கேட்டால் மனிதன் மகிழ்ச்சியோடு வாழலாம்!'

இது ஒரு மனிதனின் நம்பிக்கை. மனம் சொல்லியது... 'அழகான வீடு ஒன்றைக் கட்டிக்கொள்!'

அந்த மனிதன் அழகான வீட்டைக் கட்டிக்கொண்டான். இயற்கை எழில் கொஞ்சும் மலையடிவாரம். அதை ஒட்டினாற் போல மிகப் பெரிய ஏரி. சுற்றிலும் பசுமையான மரங்கள். திரும்பிய இடமெல்லாம் வண்ணவண்ணப் பூக்கள். இவற்றின் நடுவே அந்த வீட்டை உருவாக்கினான்.

ஒரு நல்ல நாளில் அந்த வீட்டில் குடியேறினான். தினமும் வேளாவேளைக்குச் சாப்பிட வேண்டியது. வெளியே வரவேண்டியது. இயற்கைக் காட்சிகளை ரசிக்க வேண்டியது. இதுதான் அவன் வேலை!

தினமும் அதே காட்சி... அதே மலைகள்... அதே மரங்கள்... அதே மலர்கள்... கொஞ்ச நாளில் அவனுக்குச் சலிப்பு ஏற்படத் தொடங்கியது.

இப்போது மனம் சொன்னது... 'இனி இந்த வீடு வேண்டாம்... இதை விற்று விடு!'

அந்த மனிதன் உடனே செயலில் இறங்கினான். ஒரு தரகரைத் தேடிக் கண்டு பிடித்து அழைத்து வந்தான்.

"தரகரே! இந்த வீட்டை விற்க வேண்டும்!"

தரகர் வீட்டைப் பார்த்தார். அவருக்கு வியப்பு! "இவ்வளவு அழகான வீட்டை எதற்காக விற்கவேண்டும் என்கிறீர்கள்?"

"எனக்கு இந்தச் சூழல் சலித்துப் போய்விட்டது. அவ்வளவுதான்!"

"நன்றாக யோசித்துப் பாருங்கள்!"

"யோசித்துப் பார்த்துவிட்டுத்தான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறேன். எனவே, நான் சொன்னதைச் செய்யுங்கள்!"

"சரி... உங்கள் விருப்பம்." தரகர் போய்விட்டார்.

இந்த மனிதன் தனக்கென்று வேறு ஒரு வீடு தேடினான். இதுவும் அழகான சூழ்நிலையில் அமைய வேண்டும் என்று விரும்பினான். எனவே, தினந்தோறும்

செய்தித்தாள்களில் விளம்பரப் பக்கங்களைப் புரட்டினான். 'வீடு விற்பனைக்கு' என்கிற பகுதியைத் தேடினான். ஒரு விளம்பரம் கண்ணில் பட்டது.

'அழகான பளிங்கு மாளிகை... விற்பனைக்குத் தயார்... ஏரி சூழ்ந்த எழில் மனை... மனங்கவரும் மலைச்சாரல்... இதயத்தைக் குளிர வைக்கும் இயற்கைச் சூழல்... தேவைக்கு அணுகுங்கள்!' என்று சொல்லி தொடர்புக்கு தொலைபேசி எண்ணையும் கொடுத்திருந்தார்கள்.

மனம் சொல்லியது.

'விடாதே... இதுதான் நீ தேடிய வீடு... உடனே வாங்கு!'

உடனே தொலைபேசியை எடுத்தான். தொடர்பு கொண்டான். "வீடு விற்பனைக்கு... விளம்பரம் பார்த்தேன்..."

"சரி....!"

"அதை நான் வாங்க விரும்புகிறேன்... விலை எவ்வளவு சொன்னாலும் பரவாயில்லை!"

"ஸாரி சார்! அதை நீங்க வாங்க முடியாது..!"

"ஏன்?"

"அது உங்கள் வீடுதான்... உங்களிடம் வந்த தரகர் நான்தான்... நான்தான் அந்த விளம்பரத்தைப் பத்திரிகைகளில் கொடுத்திருக்கிறேன்!"

மனிதனுக்கு மயக்கம் வந்தது.

மனம் இப்படித்தான்... அது சொல்கிறபடியெல்லாம் கேட்காதீர்கள். நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் இதுதான்.

மனம் சொல்வதைக் கவனியுங்கள். அறிவால் அலசுங்கள். அப்புறம் செயலில் இறங்குங்கள். இப்படிச் செய்தால் குழம்பவேண்டிய அவசியம் இருக்காது. நீக்ரோ ஞானி ஒருவர் சொன்னது இது... "கடவுளின் ஆட்சியிலும் தேர்தல் உண்டு. அங்கு மூன்று வோட்டுகளே செல்லுபடியாகும். கடவுள் உங்களுக்கு ஆதரவாக வோட்டளிப்பார். சாத்தான் எதிர்த்து வோட்டளிப்பார். இரண்டும் சமமாகிவிடும். கடைசியில் உங்கள் வோட்டுத்தான் உங்கள் தலைவிதியை முடிவு செய்யும்!"



# ‘கடவுளே... நீ இருக்கிறாயா?’

விரிந்த அந்தக் கடலில் அழகாக ஒரு பாய்மரக் கப்பல் போய்க் கொண்டிருக்கிறது. திடீரென்று புயற்காற்று வீச ஆரம்பித்தது. கப்பல் கட்டுப்பாட்டை இழந்தது, திசை தெரியாமல் போனது. ஒரு பாறை மீது மோதியது. கப்பல் உடைந்து போனது. ஒருவன் மட்டும் தப்பித்தான். ஒரு மரத்துண்டைப் பற்றிக் கொண்டு நீந்தினான். தூரத்தில் ஒரு சிறு தீவு கண்ணில் பட்டது.

“கடவுள் இருக்கிறார்!” என்று உரக்கக் கத்தினான். அவர்தான் தன்னைக் காப்பாற்றியதாக நம்பினான். “கடவுளே உனக்கு நன்றி!” என்றான். கரையேறினான். தீவுக்குள் நுழைந்தான். அங்கே போனதும்தான் தெரிந்தது. மனிதர்கள் யாரும் அங்கே இல்லை. என்ன செய்வது? யோசித்தான். அங்கே கிடந்த சில குச்சிகளையும் காய்ந்த மட்டைகளையும் இலை தழைகளையும் சேகரித்தான். ஒரு சிறு குடிசையை உருவாக்கினான். செடி கொடிகளில் இருந்த காய் கனிகளைப் பறித்துத் தின்றான். ஆனாலும் ‘இப்படியே எப்படிக் காலம் தள்ளுவது? ஊருக்கு எப்படிப் போய்ச் சேருவது?’ நாளுக்கு நாள் அவனுக்குள் தவிப்பு அதிகமாயிற்று.

ஒரு கட்டத்தில், “கடவுளே! நீ இருக்கிறாயா?” என்றான். “உனக்குக் கண் இருக்கிறதா?” என்று திட்டினான்.

ஒரு நாள் தீவுக்குள் நடந்து போய்விட்டுத் திரும்பினான். அதிர்ச்சி காத்திருந்தது.

அந்தக் குடிசை, மூங்கில் உராய்வு காரணமாகத் தீப்பற்றி எரிந்து போயிருந்தது.

“அடக் கடவுளே! இந்தக் குடிசைகூட உன் கண்ணை உறுத்திச்சா? இதையும் எரிச்சுட்டியே... உனக்கு இரக்கமே இல்லையா?” என்று திட்டினான். கொஞ்சநேரத்தில் கடலில் ஒரு படகு வந்து கொண்டிருப்பது தெரிந்தது. அதில் நாலைந்து மனிதத் தலைகளும் தெரிந்தன.



இவன் ஆர்வத்தோடு கடற்கரைக்கு ஓடினான். அந்தப் படகிலிருந்து நாலைந்து மீனவர்கள் இறங்கினார்கள். ஓடி வந்தார்கள். "நாங்க மீன்பிடி படகுலே வந்துகிட்டிருந்தோம். இந்தத் தீவுலே புகை தெரிஞ்சிது... யாரோ இருக்காங்க... பாக்கலாம்னு வந்தோம்!"

இவன் மறுபடியும் ஆகாயத்தை நோக்கிக் கத்தினான். "கடவுளே! உன் கருணையே கருணை!"

இன்றைக்கு பக்தர்கள் இப்படித்தான் இருக்கிறார்கள். 'கடவுள் இருக்கிறாரா... இல்லையா' என்பதைவிட அவர் நமக்கு உதவுகிறாரா இல்லையா என்பதில்தான் அவர்களுக்கு அதிக அக்கறை! பக்தி பாதை மாறிப் போய்க்கொண்டிருக்கிறது.

ஒரு பக்தர் கோயிலுக்குப் போனார். அர்ச்சனைத் தட்டு வாங்கினார்.

தேங்காயை எடுத்துக் காதோரமாக ஆட்டிப் பார்த்தார். "இது வேணாம்... வேற தேங்காய் கொடு!" என்றார்.

ரொம்ப நேரம் அலசி ஆராய்ந்து ஒரு நல்ல - முற்றிய தேங்காயாகத் தேர்ந்தெடுத்தார்.

பிறகு மனத்திருப்தியோடு உள்ளே நுழைந்தார். உடன் வந்த நண்பர் ஒருவர் அப்பாவித்தனமாகக் கேட்டார்: "ஏங்க... முற்றிய தேங்காய்தான் அர்ச்சனைக்கு உகந்ததா?"

இவர் சொன்னார்: "அப்படி இல்லீங்க... முற்றிய தேங்காய்தான் சட்டினிக்கு உகந்தது!"



# எருமை மாட்டை விரட்டுவது எப்படி?

அது ஒரு சிற்றூர். அங்கே ஒரு பள்ளிக்கூடம். அதிகமாக யாரும் அங்கே படிக்க வருவதில்லை. பெற்றோர்களுக்கும் அக்கறை இல்லை.

ஏதோ பள்ளிக்கூடம் என ஒன்று இருப்பதால், தங்கள் பிள்ளைகளை அங்கே அனுப்பி வைத்தார்கள். அவ்வளவுதான். வகுப்புக்கு வந்த ஒரு மாணவன் மிகவும் மந்தமாக உட்கார்ந்திருந்தான்.

ஆசிரியர் அவனைக் கவனித்தார்.

"என்னப்பா... இப்படி உட்கார்ந்திருக்கே... படிப்பில் கவனமில்லையா...?"

"ஐயா... என் கவனமெல்லாம் எங்க வீட்டுலயே இருக்கு!"

"அப்படி உங்க வீட்டுல என்ன இருக்கு?"

"ஒரு எருமை மாடு இருக்கு!"

"என்னப்பா சொல்றே?"

"ஐயா... நேத்து எங்க அப்பா மாட்டுச் சந்தைக்குப் போனார். ஒரு எருமை மாடு வாங்கிட்டு வந்திருக்கார். அதை எங்க வீட்டு வாசல்ல கட்டிப்போட்டிருக்கார். என் ஞாபகமெல்லாம் அங்கேயே இருக்கு!"

ஆசிரியர் யோசித்தார். இதற்கு என்ன செய்யலாம்?

"தம்பி! ஒண்ணுசெய்!"

"என்ன ஐயா?"

"நான் உனக்கு ஒரு வாரம் லீவு தர்றேன்... நீ என்ன செய்யறே... நம்ம ஊர் எல்லையிலே ஒரு மலை இருக்கே... அங்கே ஒரு குகை இருக்கு... அதுலே போய் உக்காந்துக்க! ஒரு வாரம் பூரா எருமை மாட்டைப் பத்தியே நினை... பிறகு வா!"

"சரி சார்...!" என்று சொல்லிவிட்டு அவன் புறப்பட்டான்.

ஆசிரியர் நினைத்துக்கொண்டார்.

'ஆசை தீரும் வரையில் அவன் எருமை மாட்டைப் பற்றியே நினைத்துக்

கொண்டிருக்கட்டும். அதன்பிறகு ஒரு தெளிவு பிறக்கும். அப்புறம் படிப்பில் கவனம் திரும்பும்!'

ஒரு வாரம் கழிந்தது.

குகைக்குப் போனவன் திரும்பி வந்தான். வகுப்பின் வாசலுக்கு வெளியே நின்றான். ஆசிரியர் பார்த்தார்.

"என்னப்பா... வெளியே நிற்கிறாய்...? எருமை மாட்டைப் பற்றி யோசித்து முடித்துவிட்டாயா?"

"ஆமாம் ஐயா! இப்போது எனக்கு எருமை மாட்டைப் பற்றிய எண்ணமே இல்லை!"

"அப்படியானால் உள்ளே வா! ஏன் இன்னமும் வெளியே நிற்கிறாய்?"

"ஐயா! எப்படி உள்ளே வருவது? என்னுடைய கொம்புகள் வாயிற்படியில் குத்துகின்றனவே!"

ஆசிரியர் அசந்துபோனார்!

எருமையைப் பற்றியே நினைத்துக் கொண்டிருப்பவன் எருமையாகவே ஆகிவிடுகிறான் என்கிற உண்மை அவருக்குப் புரிந்தது.

இதேபோலக் கடவுளையே தியானிப்பவன் கடவுளாகிறான் என்கிறது உபநிடதம். அதேசமயம், இந்தக் கதைக்கு இன்னொரு கோணமும் இருக்கிறது. எருமையை மறக்கவே அவன் எருமையை நினைத்தான். ஆனால், எருமையாகவே தன்னை உணர்ந்தான்.

ஆனால், மனம் ஒன்றை மறக்க நினைக்கிறது!

அந்த 'ஒன்று' மனதுக்குள்ளேயே மறைந்து கொள்கிறது.

இந்த விளையாட்டில் சிக்கிக்கொண்டுதான் இன்றைய மனிதன் தவித்துக்கொண்டிருக்கிறான்.

ஞானிகள் என்ன சொல்கிறார்கள் தெரியுமா?

'இந்த உலகம் வெகு எளிமையான நிலையில்தான் இருக்கிறது. சிக்கல் உங்களிடம்தான்!

நீங்கள் உங்களுக்குள்ளேயே அமைதியாக இருங்கள். அப்படி உங்களால் இருக்க முடியவில்லையென்றால் உங்களையே அறிய முற்படுங்கள். அதற்காக சில தியான முறைகளைக் கையாளுங்கள்!"

'எருமை மாட்டை' விரட்ட இதுவே எளிய வழி!



# இரண்டு குடிகாரன்களும் ஒரு போலிஸ்காரரும்!

ஒரு நெடுஞ்சாலை. இரவு நேரம்.

அங்கே இரண்டு குடிகாரர்கள். காவலர் ஒருவர் அவர்களைக் கவனித்தார். பிடித்துக்கொண்டு போனார்.

மறுநாள் காலை. நீதிமன்றத்தில் அவர்களைக் கொண்டுபோய் நிறுத்தினார்.

நீதிபதி கேட்டார். "நீங்கள் குடித்திருந்தீர்களா?"

"நாங்க குடிக்கவே இல்லீங்க." என்றார்கள் அவர்கள்.

காவலரை நோக்கிக் கேட்டார் நீதிபதி:

"இவர்கள் குடித்திருக்கிறார்கள் என்று நீங்கள் எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?"

காவலர் சொன்னார்: "ஐயா! நேற்றிரவு இவர்களை நான் கூர்ந்து கவனித்தேன். இந்த இரண்டு பேரில் ஒருவனின் சட்டைப்பையில் இருந்து கொஞ்சம் பணநோட்டுகள் கீழே விழுந்தன. அதை அவன் கவனிக்காமல் இருந்தான். கீழே விழுந்த அவ்வளவு பணத்தையும் இன்னொருத்தன் பொறுக்கி எடுத்து அப்படியே அந்தப் பணத்தோட சொந்தக்காரன்கிட்டேயே கொடுத்தான்!"

நீதிபதி சொன்னார்: "அப்படின்னா... குடிச்சது உறுதி ஆயிட்டுது! இனி தீர்ப்பு வழங்குகிறேன்..!"

மனித மனம் பணத்துக்கு மரியாதை கொடுக்கவில்லை என்றால், அது மயங்கியிருக்கிறது என்று பொருள்.

மனித இயல்பைச் சுலபமாக மாற்றிவிடக்கூடியவை மூன்று.

ஒன்று, பணம்; இன்னொன்று, பதவி;

அடுத்தது, புகழ்.

நம்மிடம் இருக்கிற பணத்துக்கு ஒரு மரியாதை.

அடுத்தவரிடம் இருக்கிற பணத்துக்கு வேறொரு விதமான மரியாதை.

இதுதான் இன்றைய உலகம்.

ஒரு பேருந்து போய்க் கொண்டிருக்கிறது.

பயணிகளில் ஒருவர் திடீரென்று கத்தினார்.

"கண்டக்டர்... ஒரு திருடன்... பணத்தை எடுத்துக்கிட்டு ஓடறான்... பஸ்ஸை நிறுத்துங்க!" நடத்துநருக்குக் கோபம்.

"பணத்தைப் பத்திரமா வெச்சிருக்க வேணாமாய்யா! இப்ப இப்படி வாள்வாள்னு கத்தறியே... போன பணம் திரும்பியா வரப்போவுது? பேசாம கம்முன்னு வாயை மூடிக்கிட்டு வா!"

"உங்களுக்கே கவலை இல்லேன்னா நான் என்ன பண்றது... சரி, விட்டுடுங்க!"

"என்னய்யா சொல்றே?" - நடத்துநரிடம் குழப்பம்.



"அவன் உங்க பையிலே இருந்த பணத்தைத்தான் எடுத்துக்கிட்டு ஓடறான்!"

இப்போது நடத்துநர் பொத்தென்று கீழே குதித்து திருடனைக் குறிவைத்து ஓடத் துவங்குகிறார்!

இதுதான் இன்றைக்கு நாம் காணும் உலகம். சரி... அப்படியென்றால் பணத்தின்மீது ஆசையே கூடாதா?

ஆசைப்படாமல் எதையும் அடைய முடியாது.

பணம் அளவாக இருந்தால் அது உன்னைக் காப்பாற்றும்.

அளவுக்கு அதிகமாக இருந்தால் அதை நீ காப்பாற்ற வேண்டியிருக்கும் என்று எச்சரிக்கிறார்கள் நம் முன்னோர்கள்.

ஆன்மிகம் என்ன சொல்கிறது தெரியுமா?

இந்த உலகத்தில் இரண்டு மகத்தான சோகங்கள் உண்டு.

ஒன்று - ஆசைப்பட்டது கிடைக்காதபோது ஏற்படுவது.

இன்னொன்று - ஆசைப்படாதது கிடைத்துவிடுகிறபோது ஏற்படுவது!



# உண்மை என்றால் என்ன?

ஒரு மனிதன் கடவுளைத் தேடிப் போனான். அவரிடம் கேட்டான். "கடவுளே! உண்மையைப் பற்றித் தெரிந்து கொள்வதற்காக வந்திருக்கிறேன்... அதைப் பற்றிக் கொஞ்சம் சொல்லுங்களேன்..!"

கடவுள் யோசித்தார். பிறகு அந்த மனிதனைப் பார்த்துச் சொன்னார். "நண்பனே! வெயில் தாள முடியவில்லை. எங்கேயாவது போய் ஒரு குவளை தண்ணீர் கொண்டுவா!"

'சரி' என்று மனிதன் புறப்பட்டான். ஓர் ஊருக்குள் நுழைந்தான். கண்ணில் பட்ட முதல் வீட்டின் கதவைத் தட்டினான்.

ஓர் அழகான பெண் கதவைத் திறக்கிறாள். மனதைப் பறிகொடுக்கிறான். காதல் மலர்கிறது.

இவன் எதற்காக அங்கே வந்தானோ, அந்த தண்ணீர் விஷயத்தை மறந்துவிடுகிறான்.

இருவரும் திருமணம் செய்துகொள்கிறார்கள். கொஞ்ச காலத்தில் குழந்தைகுட்டிகள்.

ஒரு நாள் அடைமழை பெய்கிறது. வயல்வெளி, வீடு, வாசல் எங்கும் தண்ணீர்!

இவன் வெளியே புறப்பட்டான். மனைவியை ஒரு கையில் பிடித்துக்கொண்டான். தோளில் ஒரு குழந்தை. இன்னொரு கையில் ஒரு குழந்தை. மற்ற குழந்தைகள் பின்தொடர்கின்றன.

வழியில் ஓர் ஆற்றைக் கடக்க வேண்டியிருக்கிறது. இறங்கினான். நடந்தான். திடீரென்று வெள்ளம் பெருகியது.

இவனையும் மனைவி மக்களையும் வெள்ளம் அடித்துக்கொண்டு போகிறது. என்ன செய்வதென்றே புரியவில்லை. கைகள் இரண்டையும் உயரே தூக்கியவாறு கத்தினான். "கடவுளே என்னைக் காப்பாற்று...!"

இவனது அபயக்குரல் கடவுள் காதில் விழுந்தது. உடனே கடவுள் கேட்டாராம். "அப்பனே! நான் கேட்ட ஒரு குவளைத் தண்ணீர் எங்கே?"

உண்மையைத் தெரிந்துகொள்ளப் புறப்பட்டவன் இப்போது விழிக்க ஆரம்பித்தான்.

மனித இயல்பு இது.



மனம் அவனைக் கட்டி இழுத்துக்கொண்டு போகிறது. அவன் போய்க்கொண்டே இருக்கிறான். அவ்வளவுதான்.

உண்மையிலேயே கடவுள் மீது மனிதனுக்கு முழு நம்பிக்கை இருக்கிறதா? கடவுளைத் துணைக்குக் கூப்பிடுகிறவன் யார்?

தேர்வு எழுதப் போகிறவன்.

வேலை தேடி அலைகிறவன்.

பண நெருக்கடியில் இருக்கிறவன்.

விபத்தில் சிக்குகிறவன்.

துன்பம் வருகிறபோது தப்பிக்க விரும்புகிறான். அப்போது வழிபாடு தேவைப்படுகிறது.

தத்துவஞானி ஜே. கிருஷ்ணமூர்த்தி சொல்கிறார். "மனித இனத்தைக்

கடவுள்கள் காப்பாற்றுவார்கள் என்று மக்கள் நம்பி வருகிறார்கள். ஆனாலும் போர்கள் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன!"

சரி... அப்படியானால் கடவுளை எங்கேதான் கண்டுபிடிப்பது?

உங்களை நீங்கள் அறிந்துகொண்டால் போதும்.. கடவுளாகிவிடுவீர்கள்!"



# அரசனைப் போல் வாழுங்கள்!

அவனுக்குப் பணம்தான் முக்கியம். அது இருந்தால் போதும். வேறு எதுவும் தேவை இல்லை என்று நினைப்பவன்.

பணம் கையில் இருந்தால் ஆசைப்பட்டது எதுவாக இருந்தாலும் அதை வாங்கித் தமக்குச் சொந்தமாக்கிக் கொள்ளலாம் என்பது அவன் நம்பிக்கை.

தன்னைவிட, தன்னிடம் இருக்கும் பணத்துக்கு அவன் அதிக மரியாதை கொடுத்தான். பணம் கொடுத்து வாங்குகிற பொருள் எதுவானாலும் அதன் மீது உயிரையே வைத்திருந்தான்.

அவன் ஒரு நாள் தன் நண்பனைத் தேடிப் போனான். அந்த நண்பன் அப்போதுதான் புதிதாக கார் ஒன்று வாங்கியிருந்தான்.

'காரை கொஞ்ச நேரம் இரவலாகத் தரமுடியுமா?' என்று இவன் கேட்டான்.

அவனும் 'சரி' என்று சாவியைக் கொடுத்தான். இவன் காரை எடுத்துக்கொண்டு புறப்பட்டான்.

ஒரு சாலையில் வேகமாகப் போய்க் கொண்டிருந்தபோது எதிரே வந்த இன்னொரு கார் இவனது காரை வேகமாக உரசிக்கொண்டு போய்விட்டது.

அவ்வளவுதான். கார் கதவு துண்டாகி உரசிய காரோடு ஒட்டிக்கொண்டு போய்விட்டது.

இவன் கீழே குதித்தான்.

"ஐயோ... போச்சே... ஐயோ போச்சே...!" என்று கத்தினான்.

போக்குவரத்துக் காவலர் பதறியபடி ஓடிவந்தார். "அடப் பாவி! கதவு போச்சேனு கத்தறியே... திரும்பிப் பார்... உன் கையே போயிடுச்சு!"

இவன் திரும்பிப் பார்த்தான். தன் கையைக் காணவில்லை.

மறுபடியும் கத்தினான். "ஐயோ... போச்சே! ஐயோ போச்சே...!"

காவலர் சொன்னார்.

"கவலைப்படாதே! வா! ஆஸ்பத்திரிக்குப் போகலாம்!"

இவன் மறுபடியும் கத்தினான்.

"நான் கைபோனதுக்காகக் கத்தலே... அதுலே போட்டிருந்த புது கைக்கடிகாரம் போயிடுச்சே...!"

இப்படிப்பட்ட ஆசாமிகளைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

பணத்துக்காக உயிரையே கொடுக்கத் தயாராக இருப்பவர்கள் இவர்கள். இவர்களைப் பொறுத்தவரையில் உயிரின் விலையைவிட பணத்தின் விலை அதிகம். பண உணர்வு அந்த அளவுக்கு மனிதனின் மன உணர்வை மாற்றிவிடுகிறது.



அமைதியாக வாழ விரும்புகிறவர்கள் அதிகப்படியான ஆசையைக் குறைத்துக்கொள்ள வேண்டும். 'மன அமைதியும் பொருள்களில் பேராசையும் ஒன்றுக்கொன்று முரணானவை' என்கிறார் சுவாமி சிவானந்தர். 'அவை இரண்டும் இணங்கிப் போவதில்லை. எனவே, உங்களுக்கு எது தேவையோ அதைத் தேர்ந்தெடுங்கள்' என்பது அவர் கூறும் ஆலோசனை.

அவர் சொல்கிறார்: 'உங்கள் பொதுவான புற வேலைகளுக்கேற்ப தேவையானவற்றை மிக மிகக் குறைத்துக்கொள்ளுங்கள். ஆசைகளும் தேவைகளும் மிக மிகக் குறையும் அளவுக்கு மன அமைதி மிகவும் அதிகரிக்கும்.'

நண்பர்களே!

நாம் கையில் கட்டியிருக்கும் கடிகாரம் நமக்கு நிகழ்கால நேரத்தைக் காட்டிக் கொண்டிருக்கிறவரையில் பிரச்னை இல்லை.

அதுவே நம் எதிர்காலத்தை நிர்ணயிக்கிற அளவுக்கு அதன் மீது ஆசை கொள்வது அவசியமில்லை.

சுவாமி சிவானந்தர் சொல்வதைக் கவனியுங்கள்.

'உங்கள் தேவைகளைப் பெருக்கிக்கொண்டு பிச்சைக்காரனைப் போல் திரியாதீர்கள்! உங்கள் தேவைகளைக் குறைத்துக்கொண்டு அரசனைப் போல வாழுங்கள்!'



# பழிவாங்கும் எண்ணம் பாதுகாப்பானதா?

அது ஒரு சிற்றூர். அதை ஒட்டி ஒரு காடு.

அந்தச் சிற்றூரில் வசித்து வந்தான் ஒருவன். அவன் ஒரு நாள் காட்டுக்குப் போனான். ஒரு மானைப் பிடித்து வந்தான்.

மிகவும் ஆசையாக அதை வளர்த்தான். அதற்கு வேண்டியதையெல்லாம் செய்தான்.

இந்நிலையில் ஒரு நாள் அந்த மான் காணாமல் போனது. பிரியமாக வளர்த்துவந்த மான். அதை யார் கொண்டு போயிருப்பார்கள்?

'கடத்தியவன் யாராயிருந்தாலும் அவனை சும்மா விடக்கூடாது.'

"கடவுளே!" என்றான்.

கடவுள் காட்சி கொடுத்தார். "ஏன் என்னை அழைத்தாய்? உனக்கு என்ன வேண்டும்?" என்றார்.

இவன் என்ன கேட்டிருக்க வேண்டும்? "காணாமல் போன மான் எனக்கு வேண்டும்!" என்றுதானே கேட்டிருக்க வேண்டும். ஆனால், அவன் அப்படிக் கேட்கவில்லை.

இப்படிக் கேட்டான்: "என்னுடைய மான் காணாமல் போக யார் காரணமோ அவன் என் முன்னால் வந்து நிற்க வேண்டும்... அவனுக்கு என் கையால் தண்டனை கொடுக்க வேண்டும்!"

பாசம் பின்னால் போய்விட்டது. பழிவாங்கும் குணம் முன்னால் வந்துவிட்டது.

கடவுள் கொஞ்சம் தயங்கினார்.

அப்புறம் சொன்னார்: "பக்தனே! அது வேண்டாமே!"

"இறைவா! என்ன இது... ஒரு பக்தனின் வேண்டுகோளை நிறைவேற்றுவது உன் கடமையல்லவா?"

"என் கடமைதான்...! இருந்தாலும்" என்று இழுத்த கடவுள், "மீண்டும் ஒருமுறை யோசித்துக் கேளேன்!" என்றார்.

"நன்றாக யோசித்துத்தான் கேட்கிறேன்...!"

"நீ கேட்கிற வரத்தைக் கொடுக்கிறேன்... அப்புறம் என்னைக் குறைசொல்ல மாட்டாயே?"

"மாட்டேன்!"

கடவுள் முகத்தில் புன்னகை. "சரி! உன் மான் காணாமல் போக யார் காரணமோ... அவர் இதோ, உன் எதிரில்..!"

எதிரே தோன்றியது - ஒரு சிங்கம்.

அவ்வளவுதான்!

பக்தன் அலறினான். "கடவுளே! தெரியாமல் கேட்டுட்டேன்! என்னைக் காப்பாற்று! என்னைக் காப்பாற்று!"



அங்கும் இங்குமாக அவன் ஓட ஆரம்பித்தான்.

இன்றைய மனிதர்கள் பலரும் அவனைப் போல்தான் ஓடிக் கொண்டிருக்கிறார்கள். பழிவாங்க வேண்டும் என்ற எண்ணம் பாதுகாப்பின்மையை ஏற்படுத்திவிடும் என்ற உண்மை இவர்களுக்குப் புரிவதில்லை.

பழிவாங்க வேண்டும் என்கிற எண்ணம் பார்வையை மறைத்துவிடுகிறது.

புத்திசுவாதீனமில்லாத மனிதன் ஒருவன் புதுச்செருப்பு வாங்கினான். அதை வாயில் வைத்துக் கடித்துக் கொண்டிருந்தான்.

அதைப் பார்த்த பெரியவர் ஒருவர் கேட்டார்: "அதை ஏன்டா இப்படி கடிக்கிறே?"

அவன் சொன்னான்: "அது என் காலைக் கடிச்சுட்டுது... அதான் பழிக்குப் பழிவாங்கறேன்!"

நண்பர்களே! யோசித்துப் பாருங்கள்... இந்த மனிதன் நமக்குள்ளேயும்



# 55

# ஆலமரத்துப் பிசாசு!

அது மிகவும் உள்தங்கிய ஒரு கிராமம். அந்த ஊருக்குப் பேருந்து வசதி இல்லை. பக்கத்து நகரம் பத்து கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

கிராமத்தில் இருந்து ஒற்றையடிப் பாதையில் இரண்டு கிலோ மீட்டர் நடந்தால் நெடுஞ்சாலை வரும். அங்கே போனால் பேருந்து கிடைக்கும்.

நகரத்தில் இருந்து வருகிறவர்கள் நெடுஞ்சாலை நிறுத்தத்தில் இறங்கி ஒற்றையடிப் பாதையில் நடந்து ஊருக்கு வந்து சேர வேண்டும்.

இருட்டுவதற்குள் வந்துவிடுவார்கள். என்ன காரணம் தெரியுமா?

அந்த ஊர் எல்லையில் ஒரு பெரிய ஆலமரம். அதிலே ஒரு 'பிசாசு' இருப்பதாக நம்பிக்கை.

இரவில் அந்த வழியாக வருகிறவர்களைப் பார்த்தால் அந்தப் பிசாசு மரத்திலிருந்து பொத்தென்று கீழே குதிக்குமாம்! வழிமறிக்குமாம்! இருப்பதைப் பறித்துக் கொண்டு விடுமாம்! இந்த பயம் எல்லோருக்கும் இருந்தது.

எனவே, இரவில் அந்த வழியே செல்வதற்கு எல்லோருமே பயப்படுவார்கள்.

அங்கே மூன்று திருடர்கள் இருந்தார்கள். அவர்கள் இந்த பயத்தைப் பயன்படுத்திக்கொள்ள நினைத்தார்கள்.

ஒரு திட்டம் போட்டார்கள்.

என்ன திட்டம் தெரியுமா?

மூன்றுபேரும் அந்த ஆலமரத்தில் ஏறி பதுங்கிக் கொள்வது... இருட்டிய பிறகு அந்த வழியே யாராவது வந்தால் மூன்று பேரும் பொத்தென்று குதிக்க வேண்டியது. கிடைத்ததை வழிப்பறி செய்துகொண்டு ஓடிவிட வேண்டியது!



இப்படிச் செய்தால் 'பிசாசு'தான் வழிப்பறி செய்தது என்று கிராம மக்கள் நம்பிவிடுவார்கள். நம்மைத் தேடி அலையமாட்டார்கள்... பணம் நமக்கு! பழி பிசாசுக்கு.

இதுதான் அவர்கள் போட்ட திட்டம். அதன்படியே ஓர் அமாவாசை நாளைத் தேர்ந்தெடுத்தார்கள்.

மரத்தில் ஏறி ஒளிந்துகொண்டார்கள்.

இருள் சூழ்ந்தது. அவர்கள் காத்திருந்தார்கள.

எதிர்பார்த்தபடியே ஓர் ஆள் கையில் பணப்பையோடு வந்துகொண்டிருந்தான்.

பயத்தில் பாடிக்கொண்டே வந்தான்.

மரத்துக்கு அருகில் அவன் வந்ததும் - பொத்தென்று குதித்தார்கள்.

அடுத்த கணம் அந்த வழிப்போக்கன் கிழக்கே ஓடினான்.

திருடர்களும் அலறிக்கொண்டு மேற்கே ஓடினார்கள். என்ன காரணம் தெரியுமா?

மரத்தில் ஏறியவர்கள் மூன்று பேர்.

ஆனால், கீழே குதித்தவர்கள் நாலு பேர்.

நண்பர்களே!

நமது மனம் அடுத்தவர்களைத்தான் ஏமாற்றும் என்று நினைக்காதீர்கள். அது நம்மையும் சுலபமாக ஏமாற்றிவிடும்! ஏனென்றால் அந்த 'மனம்' நாம் அல்ல.

ஞானிகள் நமக்குக் கூறும் அறிவுரை:

'நீ அடுத்தவனை ஏமாற்றுவது அப்புறம் இருக்கட்டும்! உன்னிடம் நீ ஏமாந்து போகாதே!'



# வாடகைக்கு நாய் தர்றீங்களா?’

இது ஒரு வேடிக்கைக் கதை. ஒரு நீண்ட மௌன ஊர்வலம். யாரோ இறந்து போயிருக்கிறார்கள். நிறையப் பேர் வரிசையாக தலை குனிந்தபடி போய்க் கொண்டிருக்கிறார்கள்.

அந்த வழியாக வந்த ஒருவன், இந்த ஊர்வலத்தைக் கவனித்தான். ‘இது என்ன ஊர்வலம்?’ தெரிந்துகொள்ள அவனுக்கு ஆசை.

அந்த நீண்ட ஊர்வலத்தில் கடைசியாக நடந்து போய்க் கொண்டிருந்த ஒருவனிடம் கேட்டான்.

“இது என்ன ஊர்வலம்?”

“இந்த வரிசையில் முதல் ஆளாகப் போய்க் கொண்டிருக்கிறாரே... அவரிடம் போய்க் கேள்!”

இவன் இந்தக் கடைசியிலிருந்து அந்தக் கடைசிக்கு ஓடினான். அங்கே - அந்த முதல் ஆள் கையில் ஒரு நாயைப் பிடித்தபடி போய்க் கொண்டிருந்தார்.

இவன் மூச்சிரைக்க அவரிடம் கேட்டான். “ஐயா! இது என்ன ஊர்வலம்?”

“என் மனைவி இறந்துபோனாள்!”

“எப்படி?”

“இதோ... இந்த நாய் கடித்துவிட்டது!”

வந்தவன் யோசித்தான். அப்புறம் கேட்டான். “ஐயா! அப்படின்னா நீங்க எனக்கு ஒரு உதவி செய்யமுடியுமா?”

“என்ன”

“ஒரு மணி நேரம் இந்த நாயை எனக்கு வாடகைக்குக் கொடுக்க முடியுமா? எங்க வீடுவரைக்கும் கொண்டுபோய் திரும்பக் கொண்டு வந்துடறேன்!”

“உடனடியா அது முடியாது!”

“ஏன்?”

“இதோ பாரு, இப்படியெல்லாம் கேள்வி கேட்டுக்கிட்டிருக்காதே! உனக்கு இந்த நாய் வாடகைக்கு வேணும்... அவ்வளவுதானே?”

“ஆமாம்!”

"அப்படின்னா உடனே ஓடு. இதே வரிசையிலே கடைசியா போய் நில்லு! வரிசையில வா! எல்லாரும் அதுக்காகத்தான் வந்துக்கிட்டிருக்காங்க...!"

அவன் ஓட ஆரம்பித்தான்.

இப்படித்தான் இன்றைக்குப் பலரின் வாழ்க்கை ஓடிக் கொண்டிருக்கிறது.

இவர்களுக்கு அன்பின் அடையாளம் தெரிவதில்லை. உண்மையான அன்பு, அடுத்தவர்களை மதிக்கும். அவர்கள் சுதந்திரத்தில் தலையிடாது. அவர்கள் தனித்தன்மையில் குறுக்கிடாது.



இது ஓஷோ சொல்கிறார்:

"உலகத்தில் இருக்கும் காதலர்களைச் சற்று உற்று நோக்குங்கள். ஒவ்வொரு ஜோடியும் தங்களுக்குள் எந்த ரகசியமும் இருக்கக் கூடாது என்று நினைக்கிறார்கள். கணவன், தன் சகல ரகசியங்களையும் தன்னிடம் சொல்ல வேண்டும் என்று மனைவி விரும்புகிறாள்.

அதைப் போல கணவனும் தன் மனைவியின் சகல விஷயங்களையும் தெரிந்துகொள்ள வேண்டும் என்று ஆசைப்படுகிறான். இப்படி இருவரும் தங்கள் தனித்தன்மையின் சுதந்திரத்தை அழித்துக் கொள்வதன் மூலம், அப்போது நிறைவு பெறுகிறார்கள். ஆனால், போகப்போக அது எவ்வளவு துன்பத்தைக் கொடுக்கும் என்பதை அனுபவிப்பவர்களைக் கேட்டால் புரியும்."

இனிய நண்பர்களே! மேலேயுள்ள வரிகளை மனசுக்குள் கொஞ்சம் அசைபோட்டுப் பாருங்கள். அப்புறம் உங்களுக்குள் புரியும்.

அன்பின் அர்த்தத்தைப் புரிந்துகொள்ளாதவர்கள், மேலே சொன்ன மாதிரியான க்யூவில் நிற்கவேண்டியதுதான். புரிந்து கொண்டவர்கள் இந்தக் கோமாளித்தன க்யூவில் நிற்க வேண்டி இருக்காது!



# அந்தப் பத்து நாளும் பத்து யுகம்!

அது ஒரு மனநோய் மருத்துவமனை. புத்தி சுவாதீனமில்லாதவர்கள் நிறையப் பேர் அங்கே தங்கி சிகிச்சை பெற்றுவந்தார்கள். ஒரு மனிதன் அதிலே பத்தாண்டு காலமாகத் தங்கியிருக்கிறான்.

ஒரு நாள் அவனுக்குத் தோன்றியது, 'தான் இப்போது குணமடைந்துவிட்டதாக!'

இதை உடனே மருத்துவரிடம் தெரிவிக்க வேண்டுமே!

டாக்டரிடம் போனான். "டாக்டர்! என்னை நீங்கள் வீட்டுக்கு அனுப்பிவிடலாம் என்று நினைக்கிறேன்!"

"அப்படியா? மிக்க மகிழ்ச்சி. அனுப்பிவிடலாம்தான். ஆனால், அதற்கு முன் உன்னைக் கொஞ்சம் சோதனை செய்து பார்த்துவிடுகிறேன் - இன்னும் ஒரு பத்து நாள் இங்கே தங்கியிருக்க முடியுமா?"

"பத்து வருடங்களாக இங்கே தங்கியிருக்கிறேன்... இன்னும் ஒரு பத்து நாள் இருக்க முடியாதா டாக்டர்?"

"மிக்க மகிழ்ச்சி!"

டாக்டர் எல்லாச் சோதனைகளையும் செய்து பார்த்தார்.

அந்த மனிதன் முழுமையாகக் குணம் அடைந்திருப்பது தெரியவந்தது.

"சரி... நீ போகலாம்!" என்றார்.

இவன் புறப்பட்டு வீடு வந்து சேர்ந்தான்.

அதன் பிறகு பத்திரிகையாளர்கள் இவனைத் தேடி வந்தார்கள். சில கேள்விகள் கேட்டார்கள்.

"உங்களின் மருத்துவமனை அனுபவங்களைப் பற்றி சொல்லுங்களேன்!"

அந்த மனிதன் சுருக்கமாகச் சொன்னான்.

"ஐயா! நான் பத்து வருடங்கள் புத்தி சுவாதீனமில்லாமல் மனநல மருத்துவமனையில் பலருடனும் தங்கியிருந்தேன்... அது எனக்குப் பத்து விநாடியாகப் போய்விட்டது. அதன்பிறகு பத்து நாட்கள் அவர்களுக்கு மத்தியில் புத்தி தெளிந்தவனாக இருந்தேன். அது எனக்குப் பத்து யுகமாகக் தோன்றுகிறது!"

நண்பர்களே! இதுதான் வாழ்க்கையின் ரகசியம். சூழ்நிலையை அனுசரித்து

நடந்து கொள்ளுங்கள். வாழ்க்கைப் பயணம் உங்களுக்குச் சுகமாக இருக்கும். சரி... எப்படி அனுசரிப்பது?



முதலில் எல்லாம் எனக்குத் தெரியும் என்கிற எண்ணத்தை விரட்டுங்கள். 'எனக்குத் தெரியாத பல உண்மைகள் என்னைச் சுற்றியிருக்கிற மற்றவர்களுக்குப் புரியும்' என்பதை ஏற்றுக்கொள்ளுங்கள்.

எனக்குத் தெரியாதது மற்றவர்களுக்கும் தெரியாது என்கிற மனநிலைதான், நம் அனுசரிப்புத் தன்மைக்குத் தடையாக இருக்கிறது.

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்...

மனநிலை பாதிக்கப்பட்டவர்களும் இப்படித்தான் நினைக்கிறார்கள்.

ஒரு மனநோய் மருத்துவமனை. மாலைநேரம். அதன் உள்ளே ஒரு சுவரில் காதை வைத்தபடி நின்று கொண்டிருந்தான் ஒருவன். டாக்டர் ஒருவர் அந்த வழியாக வந்தார். அவனைக் கவனித்தார்.

உடனே அவரும் அதேபோல் சுவரில் காதை வைத்துக் கேட்டார்.

பிறகு அவனிடம் "ஒன்றும் கேட்கவில்லையே!" என்றார்.

அவனுக்குக் கோபம் வந்துவிட்டது.

'பளார்!' என்று டாக்டரை அறைந்துவிட்டுச் சொன்னான்: "காலையிலேயிருந்து நான் காதை வச்சிக்கிட்டு நிக்கறேன்... எனக்கே ஒண்ணும் கேட்கலே! உங்களுக்கு மட்டும் கேட்குமா?"



# பணம் செய்யும் மாயம்!

பணம் வந்தால் பத்தும் பறந்து போகும் என்று கேள்விப் பட்டிருக்கிறோம். பணம் வந்தால் பற்றும் பறந்து போகும் என்றார் நண்பர் ஒருவர்.

“என்ன சொல்கிறீர்கள்?” என்றேன்.

அவர் ஒரு கதை சொன்னார்.

ஒரு கணவனும் மனைவியும் சுற்றுலா சென்றார்கள். ஓர் இடத்தில் சுற்றுலா பயணிகளைச் சிறு விமானங்களில் ஏற்றிச் சுற்றிக்காட்டிக் கொண்டிருந்தார்கள். “அந்த விமானத்தில் ஏறி சுற்றிப் பார்க்க ஆசையாக இருக்கிறது!” என்றாள் மனைவி. இருவரும் போய் விசாரித்தார்கள்.

“ஆளுக்கு நூறு ரூபாய் ஆகும்!” என்று பதில் வந்தது.

“அப்படீன்னா நம்ம ரெண்டு பேருக்கும் இருநூறு ரூபா ஆகுமே... என்னத்துக்கு வீண் செலவு...?” என்று பேசிக்கொண்டார்கள்.

இவர்களின் தயக்கத்தைப் புரிந்துகொண்ட விமானி, “சரி... நீங்க பணம் எதுவும் தர வேண்டாம்... விமானத்தில் ஏறிக்கொள்ளுங்கள்... ஆனால், ஒரு நிபந்தனை..!”

“என்ன, சொல்லுங்கள்?”

“விமானத்துக்குள்ளே ஒரு சிறு சத்தம்கூடப் போடக்கூடாது. அப்படிப் போட்டா நீங்க இருநூறு ரூபா எனக்குத் தந்துடணும்!”

“அவ்வளவுதானே, நாங்க கட்டுப்படுகிறோம்!”

பிறகென்ன... கணவனும் மனைவியும் மிகுந்த உற்சாகத்துடன் ஏறி உட்கார்ந்தார்கள்.

விமானம் புறப்பட்டது. உயரே எழும்பியது...

அதுவரை இருவருக்கும் பயம் ஒன்றும் தெரியவில்லை. அதன் பிறகுதான் எல்லாம்!

விமானம் கண்மண் தெரியாத வேகத்தில் பறக்க ஆரம்பித்தது. ஆகாயத்தில் எவ்வளவு உயரே போகமுடியுமோ அவ்வளவு உயரே போனது.

அங்கேயிருந்து திடீரென்று கீழே வந்தது. குட்டிக்கரணம் அடித்தது!

தலைகீழாகப் பறந்தது!

எந்தெந்த வகையில் பயமுறுத்த முடியுமோ அந்தந்த வகையில் எல்லாம் பயமுறுத்திப் பார்த்தார் விமானி. எப்படியாவது அவர்களைச் சத்தம் போட வைத்து இருநூறு ரூபாயை வாங்கிவிட வேண்டும் என்பதுதான் அவர் நோக்கம். ஆனால், அது நிறைவேறவே இல்லை. ஏனென்றால், விமானத்துக்கு உள்ளிருந்து கொஞ்சம்கூட சத்தம் வரவில்லை!

'இனியும் இவர்களைச் சத்தம் போட வைக்க முடியாது' என்று முடிவெடுத்து விமானத்தைக் கீழே இறக்கினார் விமானி. அந்தப் பெண்மணிதான் முதலில் கீழே இறங்கினாள். அவளை நெருங்கி தன் பாராட்டுதலைத் தெரிவித்தார் விமானி. "பரவாயில்லையே... நீங்க ஒரு சிறு சத்தம்கூட போடவில்லையே!"

"ஒரு கட்டத்துல என்னையும் அறியாம சத்தம்போட இருந்தேன் நல்லவேளை, அடக்கிக்கிட்டேன்!"

"எப்போ அது?"

"என் வீட்டுக்காரர் விமானத்திலிருந்து கீழே விழுந்தபோது...!"

நண்பர் சொன்ன கதையைக் கேட்டு நான் வாய்விட்டுச் சிரித்தேன். ஆனாலும் அது என்னை சிந்திக்கவும் வைத்தது.

பணம், பற்றையும் பறக்கவைத்துவிடுகிறது. சரி, இதற்கு என்ன செய்யலாம்? ஞானிகள் சொல்கிறார்கள்: 'பணத்தின் மீது வைக்கிற பற்றையே கொஞ்சம் விலக்கிவையுங்கள்!'

பணம், கணவன் - மனைவி என்கிற வார்த்தைகளையே கூட அர்த்தம் இல்லாமல் செய்துவிடும் என்பதற்கு ஓர் உதாரணம்:

மேல்நாட்டில் ஒரு கணவன் - மனைவி.

மனைவியின் ஊதாரித்தனத்தைப் பொறுக்க முடியாத கணவன் பத்திரிகையில் ஓர் அறிவிப்பு கொடுத்தான்: 'இனி என் மனைவி வாங்கும் எந்தக் கடனுக்கும் நான் பொறுப்பாளியாக முடியாது!'

மறுநாள் அதே பத்திரிகையில் மனைவி கொடுத்த அறிவிப்பு:

'என் கடன்களுக்கு யார் பொறுப்பாளியாக இருக்கிறாரோ... அவர்தான் இனி என் கணவர்!'



# தடுமாறும் மனிதர்கள்!

ஒரு நாட்டின் ஆட்சித்தலைவர்... ஒரு நாள் நகர்வலம் புறப்பட்டார். முதலில் மனநோய் மருத்துவமனை ஒன்றுக்குச் சென்றார். அங்கே எப்படி அவர்களுக்குச் சிகிச்சை அளிக்கப்படுகிறது என்பதைக் கவனித்தார்.

ஒரு பெரிய நீர்த்தொட்டி. அதிலிருந்த தண்ணீரை எடுத்து வெளியே கொட்டிக் கொண்டிருந்தார்கள் மனநோயால் பாதிக்கப்பட்டவர்கள்.

"என்ன நடக்கிறது?" என்று விசாரித்தார்.

மனநல மருத்துவர் விளக்கினார்: "ஐயா! அந்தத் தொட்டியைக் கவனித்துப் பாருங்கள். அதில் ஒரு குழாய் வழியாகத் தண்ணீர் உள்ளே வந்து கொட்டியபடியே இருக்கிறது.

தொட்டியில் உள்ள தண்ணீரை எடுத்து வெளியே முழுவதுமாகக் கொட்டிக் காலி செய்ய வேண்டும். இதுதான் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற வேலை. அதைத்தான் அவர்கள் இப்போது செய்து கொண்டிருக்கிறார்கள்!"

"இதனால் என்ன பலன்?"

"இதன்மூலம் அவர்கள் மனநிலையைப் புரிந்து கொள்ள முடியும். அதன் பிறகு அதற்குத் தகுந்த மாதிரி சிகிச்சை செய்ய வசதியாக இருக்கும்!"

"என்ன சொல்கிறீர்கள்?"

"ஐயா! புத்தி தெளிவானவர்கள் முதலில் நீர் வந்துகொண்டிருக்கிற குழாயை மூடுவார்கள். அப்படி அடைத்துவிட்டு அதன் பிறகு தொட்டியில் இருக்கிற தண்ணீரை எடுத்து வெளியே கொட்ட ஆரம்பிப்பார்கள்.

சிலர் உற்சாகமாகத் தண்ணீரை எடுத்து வெளியே ஊற்றிக்கொண்டே இருப்பார்கள். வருகிற தண்ணீர் குழாயை அடைக்க மாட்டார்கள். அவர்கள் வேலை ஓயவே ஓயாது. இதை அவர்கள் வேடிக்கையாக ரசிக்கவும் செய்வார்கள். தொட்டி ஒருபோதும் காலியாகாது! அதை நாங்கள் புரிந்துகொண்டு அதற்குத் தகுந்த மாதிரி சிகிச்சையளிப்போம்!"

ஆட்சித்தலைவர் அதைப் புரிந்து கொண்டார். திரும்பி வந்தார். அதன் பிறகு யோசித்தார். திடீரென்று ஓர் உண்மை அவருக்குப் புலனாயிற்று.

'நம்ம நாட்டில் மதுவையும் உற்பத்தி செய்கிறோம். மதுப்பழக்கம் தீமையானது

என்று பிரசாரமும் செய்கிறோம்.

மதுவகைத் தயாரிப்பையும் விற்பனையையும் முற்றிலும் ஒழிக்காமல், மதுவை ஒழித்துவிட முடியும் என்று நம்புகிறோமே!

நீர் வரும் குழாயை மூடாமல் தண்ணீர்த் தொட்டியைக் காலி செய்துவிட முடியும் என்று முயன்றுகொண்டிருக்கிற அவர்களுக்கும் நமக்கும் என்ன வித்தியாசம்?'

ஆட்சித்தலைவர் சிந்தித்தார். அதன்பிறகு தெளிவான ஒரு முடிவுக்கு வந்தார் என்பது வேறு கதை.



ஆன்மிக வழியில் செல்கிறவர்களுக்கும் இப்படி ஒரு தெளிவு தேவைப்படுகிறது.

தீய பழக்கங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்காமல் நல்ல பழக்கங்களைக் கற்றுக்கொள்ள ஆரம்பித்திருக்கிறேன் என்று அறிவிப்பது நகைப்புக்குரியது. உள்ளேயிருக்கிற குப்பைகளை வெளியேற்றாமல் வெளியேயிருக்கிற நல்ல பண்புகளை உள்ளே கொண்டுபோக முடியாது! இதைப் புரிந்துகொள்ளத் தவறினால் ஆரம்பத்தில் சொன்ன அவர்களுக்கும் நமக்கும் வித்தியாசம் இருக்காது.

ஒரு ஆசாமி தன் வீட்டைச் சுற்றி சோற்றை வாரி இறைத்துக் கொண்டிருந்தான். அந்தப் பக்கமாக வந்த ஒருவர் அதைக் கவனித்தார்:

"அட... என்னப்பா செய்யிறே?"

"யானைகளை விரட்டிக்கொண்டிருக்கிறேன்..!"

"இங்கே யானைகளையே காணோமே..?"

"அதான் விரட்டிட்டேனே..!"



# கடவுளை எப்படி வாழவைப்பது?

ஓர் ஊரில் ஒரு முனிவர் இருந்தார். தினமும் கோயிலுக்குப் போவார். சாமி கும்பிடுவார்.

ஆனால், ஒன்று... அவருக்கு சிவனைப் பிடிக்கும். பார்வதியைப் பிடிக்காது. எனவே, சிவனை மட்டும் கும்பிட்டு வந்துவிடுவார். கோயிலில் சிவனும் பார்வதியும் ஒன்றாக உட்கார்ந்திருந்தாலும் இவர் என்ன செய்வார் தெரியுமா? அவர்கள் இருவருக்கும் நடுவிலே புகுந்து சிவனை மட்டும் மூன்று சுற்றுச் சுற்றிவிட்டு வந்துவிடுவார்.

பார்வதிக்கு எரிச்சல். தன்னைப் புறக்கணிப்பதை அவளால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. என்ன செய்யலாம் என்று யோசித்தாள். பிறகு ஒரு முடிவுக்கு வந்தாள். அதை அமல்படுத்தவும் செய்தாள்.

அதாவது - ஒருமுறை அந்த முனிவர் வந்த சமயத்தில்... பார்வதி, சிவனோடு இணைந்து அர்த்தநாரீஸ்வரராகக் காட்சியளித்தாள்.

ஒரே உடலில் பாதி சிவன், பாதி பார்வதி. இதைக் கண்ட முனிவர் திகைத்தார்.

இந்தச் சங்கடத்தை எப்படி சமாளிப்பது?

யோசித்தார்.

உருவத்தை மாற்றிக்கொள்ளக் கூடிய சக்தி அவருக்கு இருந்தது. எனவே, அவர் ஒரு வண்டாக மாறினார். அவர்கள் இருவருக்கும் இடையே ஒரு துளையைப் போட்டார். அதன் வழியே உள்ளே புகுந்தார்.

மூன்று முறை சிவனை மட்டும் சுற்றிவிட்டுப் புறப்பட்டுப் போய்விட்டார்.

பார்வதிக்குக் கோபமான கோபம். அவளால் சும்மா இருக்க முடியவில்லை. சிவனைப் பார்த்துச் சொன்னாள்: "இதோ பாருங்கள்... நான் என்ன செய்தாலும் நீங்கள் அதில் தலையிடக்கூடாது! என்ன..?"

"சரி!"

பார்வதி அந்த முனிவரைக் கூப்பிட்டார்.

"இதோ பாரப்பா..! நீ என்னை அவமானப்படுத்தினாய்! சக்தியான என்னை நீ அவமதித்ததால் இந்த விநாடியிலிருந்து உன் உடம்பில் உள்ள சக்தி போகட்டும்!"

அவ்வளவுதான். அந்தக் கணமே சக்தியெல்லாம் இழந்துவெறும் சக்கையாகிவிட்டார் முனிவர்.



பரம்பொருளான சிவனைப் பார்த்து அலறத் தொடங்கினார். "நமசிவாயா... தவிக்கும் உன் பக்தனைக் காப்பாற்று...!"

"பக்தனே! உன் அறியாமைக்காக வருந்துகிறேன்!"

"என்ன சொல்கிறீர் ஈசா?"

"நானும் சக்தியும் ஒன்றுதான்!"

"அடக் கடவுளே! இத்தனை நாளா கும்பிட்டுக்கிட்டு இருக்கேன்.

இதை அப்பவே சொல்லித் தொலைக்கறதுக்கு என்ன?"

இன்றைய பக்தர்களின் நிலையும் இப்படித்தான் இருக்கிறது!

'எல்லாம் ஒன்று' என்கிறான் இறைவன். 'இல்லை... வேறு வேறு!' என்கிறான் மனிதன்.

இந்த மனிதனை நல் வழிப்படுத்த வேண்டும் என்பதற்காகத்தான் மதங்களை உண்டாக்கினார்கள்.

ஆனால், இன்றைய மதங்களுக்கு இருக்கிற கவலை - மனிதனை எப்படி வாழவைப்பது என்பதல்ல! கடவுளை எப்படி வாழவைப்பது என்பதுதான்!



# மனதிலே குழப்பமா?

அவன் கொஞ்சம் விவகாரமான ஆள்; சொன்னால் சொன்னதுதான். அபிப்பிராயத்தை மாற்றிக்கொள்ளவே மாட்டான்! அவன் ஒரு நாள் மனநல மருத்துவமனைக்கு வந்து, டாக்டர் முன் உட்கார்ந்தான்.

"டாக்டர்... உங்களைத்தான் தேடி வந்தேன்!"

"சொல்லுங்க... என்ன பிரச்னை?"

"ஒரே பிரச்னைதான் டாக்டர்!"

"என்ன அது?"

"நான் செத்துப்போயிட்டேன் டாக்டர்!"

மருத்துவரே அதிர்ச்சிக்குள்ளானார். பிறகு, சுதாரித்துக்கொண்டார். "என்னப்பா இப்படிச் சொல்றே?"

"ஆமா டாக்டர்... நான் சொல்றது உண்மை!"

டாக்டர் யோசிக்க ஆரம்பித்தார். சரி, இவனிடம் நயமாகப் பேசினால்தான், வழிக்குக் கொண்டுவர முடியும்! "இதோ பாருப்பா... நான் சொல்றதைக் கொஞ்சம் கவனமா கேக்கறியா?"

"கேக்கறேன் டாக்டர்!"

"இதோ பார்... நான் ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறேன். எனக்கு முன்னால், நீ ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறாய்! நாம ரெண்டு பேரும் பேசிக்கொண்டிருக்கிறோம். அதனால, நீ சாகலே!"

"இல்லை டாக்டர்... நீங்க பேசிக்கிட்டிருக்கிறது என்கிட்டே இல்லை!"

"பின்னே?"

"என்னோட ஆவிகிட்டே!"

டாக்டர் மறுபடியும் லேசான அதிர்ச்சிக்கு உள்ளானார். இருந்தாலும், சமாளித்துக்கொண்டு அவனோடு பேச ஆரம்பித்தார்.

அவர்கள் பேசிக்கொண்டிருக்கட்டும்... அதை அப்புறம் கவனிப்போம்! இப்போது நாம் கொஞ்சம் சிந்தித்துப் பார்ப்போம்.

மனம் நேர்வழியில் செல்கிறபோது, மனித வாழ்க்கை சுகமாக இருக்கிறது.

அது ஒன்றையே சுற்றிச் சுற்றி வருகிறபோது, வாழ்க்கை குழப்பமாகிவிடுகிறது. ஒன்றிலேயே ஒன்றுகிறபோது, அது தியானம். ஒன்றிலேயே மறைந்துவிடுகிறபோது, அது சமாதி நிலை.

நம்மைப் பொறுத்தவரை, நமக்கு வேண்டியது சுகமான வாழ்க்கை. அதற்குத் தேவை - தெளிவான சிந்தனை. வட்டமடிக்கிற மனதைக் கட்டுப்படுத்தி, அதை நேர்வழியில் செலுத்த வேண்டியது நமது கடமை. இதில் தவறும்போது, ஆரம்பத்தில் வந்த, அந்த மனிதனைப் போல மருத்துவரிடம் வாதிட்டுக் கொண்டிருக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

இப்போது மறுபடியும் அவர்கள் பேசிக்கொள்வதைக் கவனிப்போம்.

மருத்துவர் தன் முயற்சியைக் கைவிடவில்லை. மீண்டும் நயமாக ஆரம்பித்தார். "இங்கே பாருப்பா... செத்தவங்களுக்கும் உயிரோட இருக்கிறவங்களுக்கும் வித்தியாசம் இருக்குமா, இருக்காதா?"

"இருக்கும் டாக்டர்!"

"என்ன வித்தியாசம், சொல்லு!"

"நீங்களே சொல்லுங்க டாக்டர்!"



டாக்டர் மிகவும் சாமர்த்தியமாக, அறிவியல்பூர்வமாக நிரூபிக்க முயன்றார். "சரி... இப்பப் பாரு! உயிரோட இருக்கிறவங்க உடம்புல ரத்தம் ஓடும். செத்துப்போனவங்க உடம்புல ரத்தம் ஓடாது! சரியா?"

"ரொம்ப சரி டாக்டர்!"

"இப்ப அதைப் பரீட்சை பண்ணிப் பார்க்கலாமா?"

"பார்க்கலாமே!"

"அப்பாடா..." என்று நிம்மதியடைந்த டாக்டர், அவனுடைய ஒரு விரலைப் பிடித்தார். ஸ்பிரிட்டால் துடைத்தார். ஊசியால் லேசாகக் குத்தினார். ஒரு துளி ரத்தம் எட்டிப் பார்த்தது. டாக்டர் முகத்தில் மலர்ச்சி.

"அப்பாடா! ரத்தம் வந்துடுச்சு... இப்பவாவது ஒப்புக்கிறியா... நீ இன்னும் சாகலை!"

"நீங்க ஒரு திறமையான டாக்டர்தான் சார்!"

“எப்படிச் சொல்றே?”

“செத்துப்போன உடம்புல யேரத்தத்தை வரவழைச்சுட்டீங்க!”



# அந்த இன்னொரு 'ஷூ'!

'இந்த வீட்டின் மாடிப்பகுதி வாடகைக்கு விடப்படும்.'

வாசலில் தொங்கிய அறிவிப்பைப் பார்த்துவிட்டு உள்ளே நுழைந்தான் ஓர் இளைஞன்.

வீட்டுக்குச் சொந்தக்காரர் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருந்தார்.

"மாடிப்பகுதி வாடகைக்குன்னு..." இழுத்தான்.

"வாஸ்தவம்தான்... ஆனா ஒரு கண்டிஷன்!"

"சொல்லுங்க..."

"எனக்கு சத்தம் சரிப்படாது... அலர்ஜி! மாடியிலே தொம்தொம்னு ஏதும் சத்தம் எழுப்பாம நீ குடியிருக்கிறதானா சரி! எனக்கு வாடகை முக்கியம் இல்லே... அமைதிதான் முக்கியம்!"

"சரி... சார்... அப்படியே பாத்துக்கறேன்!"

இளைஞன் அந்த வீட்டின் மாடி அறையில் வாடகைக்குக் குடி புகுந்தான்.

தினமும் காலையில் புறப்பட்டுப் போய்விடுவான். இரவு பத்து மணிக்கு மேல்தான் வீட்டுக்குத் திரும்புவான்.

முதல் நாள் அப்படித் திரும்பி வந்தான். வீட்டுக்கு வெளிப்புறம் இருந்த படிகளின் வழியாக கிடுகிடுவென்று மேலே ஏறினான்.

வந்த வேகத்தில் காலில் உள்ள 'ஷூ'க்களைக் கழற்றி வீசினான். அவை ஒரு மூலையில் போய் 'தொம்' என்று விழுந்தன.

அடுத்த விநாடியே கீழே இருந்த ஆசாமி மாடிக்கு ஓடி வந்தார்- நடுங்கிக்கொண்டே!

"என்னப்பா இது... சொன்னதை மறந்துட்டியே!"

"ஓ... மன்னிச்சுக்குங்க... இனிமே ஜாக்கிரதையா இருக்கேன்!"

மறுநாள் இரவு. பத்து மணிக்கு வந்தான்.

கிடுகிடுவென்று மாடி ஏறினான். பழக்க தோஷத்தில் ஒரு ஷூவைக் கழற்றி மூலையில் எறிந்தான்.

அது தொம்மென்று போய் விழுந்தது.

அப்போதுதான் அவனுக்கு ஞாபகம் வந்தது. 'ஆகா... தப்பு செஞ்சுட்டோமே!'

இனி எச்சரிக்கையாக இருக்கவேண்டும் என்று நினைத்தபடியே இன்னொரு காலில் இருந்த 'ஷூ'வை மெல்லக் கழற்றினான். அதைக் கையில் எடுத்துக்கொண்டான். அடிமேல் அடிவைத்து நடந்தான்.

அந்த மூலைக்குப் போனான். கையில் இருந்த இன்னொரு ஷூவை சத்தமில்லாமல் தரையில் வைத்தான். நல்லபிள்ளையாக வந்து பாயில் படுத்துக்கொண்டான்.

விடிந்தது. அதிகாலை 4 மணி.

கதவு தட்டப்படும் ஓசை.

இந்த நேரத்தில் யார்?

இளைஞன் கதவைத் திறந்தான்.

வெளியே -

இரு காதுகளையும் கைகளால் பொத்திக்கொண்டு - உடல் நடுக்கத்தோடு வீட்டுக்காரர்.

"என்னப்பா... ஒரு தடவைதான் 'தொம்' சத்தம் கேட்டது... அந்த இன்னொரு ஷூவையும் சீக்கிரம் போட்டுத் தொலை! இன்னொரு சத்தம் வரலையேனு ராத்திரி பூரா காதை பொத்திக்கிட்டு முழிச்சிக்கிட்டே இருக்கேன்!"

இதைப் போலத்தான் இன்றைக்கு நம்மில் பலரும் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

நம்முடைய அறிவு சொல்கிறபடி மனம் கேட்கவேண்டும்.

ஆனால், இன்றைக்கு மனம் சொல்கிறபடி அறிவு கேட்டுக் கொண்டிருக்கிறது.

மனம் ஒரு குதிரையாக இருக்கவேண்டும். அறிவு அதன் முதுகில் ஏறிச் சவாரி செய்யவேண்டும்.

அதுதான் சுகமான வாழ்க்கை. ஆனால், இன்றைக்கு அறிவு குதிரையாக இருக்கிறது.

மனம் அதன் முதுகில் ஏறி உட்கார்ந்து கொண்டிருக்கிறது.




# ஏன் அலைகிறது மனம்?

சுவாமி சின்மயானந்தர் ஒரு முறை கல்கத்தா சென்றிருந்தார். அவரின் நண்பர் வீட்டில் தங்கியிருந்தார். அந்த நண்பருக்கு ஒரே ஒரு மகன். அவருக்கு மனதில் ஒரு பெருங்குறை. அதை சுவாமியிடம் சொன்னார்.

"சுவாமி, என் மகன் தேர்வில் போதுமான மதிப்பெண்கள் வாங்குவதில்லை!"

"அவன் சரியாகப் படிப்பதில்லையோ?"

"இரவில் இரண்டு மணிவரை கண்விழித்துப் படிக்கிறான்!"

"அட... அப்படியுமா மார்க் வாங்குவதில்லையா?"

"ஆமாம்!"

"சரி, பொறுங்கள்... காரணத்தைக் கண்டுப்பிடிப்போம்!"

அன்று நடுஇரவு. ஓய்வில் இருந்த சுவாமி கண்விழித்தார். மெல்ல எழுந்தார். வெளியே வந்தார். இளைஞன் இருக்கிற அறைப் பக்கமாக நடந்தார். ஜன்னல் வழியாக உள்ளே கவனித்தார்.

விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அவன் ஒரு மேஜைக்கு முன்னால் உட்கார்ந்திருந்தான். எதிரே ஒரு புத்தகம். அவன் படிப்பதற்கு வசதியாக நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. அவனைப் பார்த்த சுவாமிக்குப் பரிதாபமாக இருந்தது.

அவன் எப்படிப் படிக்கிறான்? அதைக் கவனிக்கவேண்டும். அருகில் போனார். அவன் கண்களைக் கவனத்தார். அவை இரண்டும் மிகுந்த கவனத்தோடு அந்தப் புத்தகத்தையே பார்த்துக் கொண்டிருந்தன.

ஆனால், அவன் கைகள்... வலது கை, இடது கையைப் பற்றியபடி, முன்னுக்கும் பின்னுக்குமாகப் போய் வந்துகொண்டிருந்தது. சுவாமிக்கு ஒன்றும் புரியவில்லை.



சிறிது நேர யோசனைக்குப் பின் மெதுவாக அவன் தோளைத் தொடுகிறார் சுவாமி. திரும்பிப் பார்த்த இளைஞன் மரியாதையாக எழுந்து நிற்கிறான்.

சுவாமி கேட்கிறார்: "தம்பி, நீபடித்துக்கொண்டிருப்பது புரிகிறது. கையால் என்ன செய்கிறாய்?"

அவனுக்கு வெட்கமாகிவிட்டது.

"சும்மா சொல்லு!"

"சுவாமிஜி! நான் எங்கள் கல்லூரி கிரிக்கெட் டீமில் விளையாடுகிறேன். நான்தான் முக்கியமான 'பாட்ஸ்மேன்'. அதனால், மானசீகமாக 'ஸ்பின்' எடுத்துவரும் பந்துகளைத் தடுத்து விளையாடப் பழகிக் கொண்டிருக்கிறேன்!"

சுவாமிஜி சிரித்துக்கொண்டே திரும்பிவிடுகிறார்.

புத்தகம் படிக்கும்போது விளையாட்டு மைதானம் ஞாபகத்துக்கு வருகிறது. விளையாட்டு மைதானத்தில் இருக்கும்போது படிப்பு ஞாபகம் வருகிறதா? வகுப்பில் இருக்கிறபோது சினிமா ஞாபகத்துக்கு வருகிறது சினிமா பார்க்கும்போது வகுப்பு ஞாபகம் வருகிறதா?

என்ன காரணம்?

படம் பார்க்கிறபோது மனம் ஒன்றிப் போகிறது. பாடம் படிக்கிறபோது மனம் அலைய ஆரம்பித்துவிடுகிறது!

மனதை அடக்கிப் பாருங்கள். அது அலைய ஆரம்பித்துவிடும்! மனதை அறிந்துகொள்ள முயலுங்கள். அது அடங்க ஆரம்பித்துவிடும்!



# சும்மா இருப்பது சுலபமா?

ஓர் ஊரிலே கோயில் இருந்தது. அரசாங்கம் அந்தக் கோயிலைப் பராமரித்து வந்தது. அதிகாரிகள் அவ்வப்போது வந்து, கணக்கு வழக்குகளைச் சரிபார்ப்பது வழக்கம்.

அந்த வகையில், ஒரு சமயம் அரசாங்க அதிகாரி அங்கே வந்தார். கோயில் நிர்வாக அதிகாரி கணக்குப் புத்தகங்களையும் மற்ற பதிவேடுகளயும் எடுத்து அவர் முன்னால் வைத்தார்.

வந்த அதிகாரி, கோயில் செலவுக் கணக்குகளைப் பார்த்துக்கொண்டு வந்தார். 'சும்மா இருக்கும் சாமியாருக்கு ஒரு பட்டை சோறு...' என்று தினசரி செலவுப் பட்டியல் எழுதப்பட்டிருந்தது.

அதைப் பார்த்த அவர், "சும்மா இருக்கிறவருக்கு எதுக்காக சோறு போடணும்? அதை உடனே நிறுத்துங்கள்!" என்று ஆணையிட்டார்.

உடனே ஆலய ஊழியர்கள் அதிகாரியை நெருங்கி மெல்லச் சொன்னார்கள்: "ஐயா, சும்மா இருப்பது சுலபமான காரியமல்ல... அதனால்தான் அவருக்குச் சோறு வழங்கிறோம்!"

இந்த விளக்கம் அந்த அதிகாரிக்கு திருப்தி அளிக்கவில்லை. எனவே, அதுபற்றி ஒன்றும் சொல்லாமல் வீட்டுக்கு வந்துவிட்டார். வந்தப்பிறகு, ஒரு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து யோசிக்க ஆரம்பித்தார்.

'சும்மா இருப்பது என்ன அவ்வளவு கடினமான காரியமா? கொஞ்ச நேரம் நாமும்தான் சும்மா இருந்து பார்ப்போமே!' முயன்று பார்த்தார். மனம் அலைய ஆரம்பித்தது... அடங்க மறுத்தது.

சரி, கொஞ்சம் நேரம் கண்களை மூடித் தியானம் பண்ணிப் பார்க்கலாம். முயன்றார். 'வயிறு பசிக்கிறது போலிருக்கிறதே!' என்று நினைத்தது மனம். ஒரு புத்தகத்தை எடுத்துப் புரட்டினார். கவனத்தை அதில் செலுத்தினார். காகம் ஒன்று எங்கோ கத்துகிற சத்தம் அவர் காதில் வந்து விழுந்தது. கண்களையும் காதுகளையும் கட்டுப்படுத்த முயன்றார்.

மனம் எதிர்காலத்தைப் பற்றி யோசிக்க ஆரம்பித்தது. மகளுக்கு மாப்பிள்ளை தேடவேண்டும். மகனுக்கு வேலை தேடவேண்டும்.மறுபடியும் எதையும் நினைக்காமல் தியானம் செய்ய முயன்றார்.

திடீரென ஒரு மணம் வந்து மூக்கைத் தொடுகிறது. கண்விழித்துப் பார்க்கிறார்.

மனைவி கொண்டுவந்து வைத்துவிட்டுப்போன சூடான காபி எதிரே மேஜைமீது இருக்கிறது. அதை எடுத்துக் குடிக்க ஆரம்பித்துவிட்டார். அவர் ஒன்றைப் புரிந்துகொள்ளவில்லை.

'மனம் - தியானம் இரண்டும் ஒன்றுக்கொன்று சம்பந்தமுள்ளது' என்று நினைக்கிறார். அது அப்படி அல்ல; மனம் முடிந்துபோகிற இடத்தில்தான் தியானம் ஆரம்பமாகிறது. எனவே, தியானம் இருக்கிற இடத்தில் மனம் இல்லை. மனம் செயல்படுகிற வரையில் தியானமும் ஆரம்பமாவதில்லை. அதிகாரி திணறிப்போனார். அவருக்கு ஊழியர்கள் கட்டுப்படுகிறார்கள். உள்ளே இருக்கிற மனம் கட்டுப்பட மறுக்கிறது. வேடிக்கையான கதையொன்று அவர் நினைவுக்கு வந்தது.

ஓர் இளைஞனைப் பார்த்து ஒரு பெரியவர் சொன்னார்: "அப்பாவுக்கு எல்லா வகையிலும் உதவியாக இருப்பது மகனின் கடமை!"

இளைஞன் உடனே சொன்னான்: "ஐயா, நான் தினமும் என் அப்பாவுக்கு உதவியாகத்தான் இருந்து வருகிறேன்!"

"ரொம்ப மகிழ்ச்சி! உன் அப்பா என்ன செய்து கொண்டிருக்கிறார்?"

"சும்மாதான் இருக்கிறார்!"

அதிகாரி நினைவு கலைந்து சிரிக்கிறார். உள்ளே இருந்து மனைவி கேட்கிறார்: "என்ன சிரிப்பு?"

"சும்மாதான் சிரிச்சேன்!"

அதிகாரி அலைபாய்கிற மனதை அடக்க முயன்று, அது முடியாமல் சோர்ந்துபோனார். 'சும்மா இருப்பது எவ்வளவு பெரிய விஷயம்!' என்பது அவருக்குப் புரிந்தது.

உடனே மறுபடியும் புறப்பட்டு அந்தக் கோயிலுக்குப் போனார். பதிவேட்டை கொண்டுவரச் சொன்னார். அதில் இப்படி எழுதினார்: 'சும்மா இருக்கும் சாமியாருக்கு இனி இரண்டு பட்டைச் சோறு!'

Printed Books



பிரச்னைகளுக்கு வடிகால் தேடி ஆன்மிகத்தை நாடுகின்ற மனிதர்கள் போலிகளின் கைகளில் சிக்குண்டு ஏமாறுவது கசக்கின்ற உண்மை. உண்மையான ஆன்மிகம் எது? உய்த்துணர வேண்டிய வாழ்வின் உட்பொருள்கள் என்னென்ன? மெய்ஞானம் முன்மொழியும் வாழ்க்கை முறை எப்படிப்பட்டது? - இந்தக் கேள்விகளுக்கான விளக்கங்களோடு 'சக்தி விகடன்' இதழில் தென்கச்சி கோ.சுவாமிநாதன் எழுதிய 'கலகல' கதைகளின் தொகுப்புதான் இந்தப் புத்தகம்.

அடுத்தவர்களுக்குச் சொல்லும் ஆறுதல்களில், உரிய நேரத்தில் செய்யும் உதவிகளில், ஆத்மார்த்தமான பாசப் பகிர்தல்களில் வெளிப்படும் இறை அனுபவத்தை உணராமல், ஆலயங்களில் இறைவனைத் தேடும் பேதைகளின் தலையில் பேனாவால் குட்டியிருக்கிறார் தென்கச்சி.

குழலின் உட்சென்று வெளிவரும் காற்று இசையாக மோட்சம் எய்துதல் போல - சிப்பியில் விழுகிற மழைத்துளி முத்தாகப் பரிணமித்தல் போல, தென்கச்சியின் சிந்தனையில் விழுந்து வார்த்தைகளில் வெளிப்பட்டிருக்கும் இந்தக் கதைகள், காயம்பட்ட மனதுக்கு ஆறுதல் மருந்தாக இருக்கின்றன; தேடல் மனம் கொண்டவர்களுக்கு தத்துவ வெளிச்சமாகவும் தரிசனம் தருகின்றன.

அரிய கருத்துக்களை எளிய மொழியில் இயல்பான நகைச்சுவையோடு எழுதியிருக்கும் தென்கச்சி உங்களை மகிழ்விக்க மட்டுமல்ல, சிந்திக்கவும் வைக்கிறார்.





விகடன் பிரசுரம்

KADAVULAI THEDATHEERGAL

Rs. 55

ISBN 81-89780-86-7

